# கல்கி

KALKI 4.8.74 60 காசு



இந்த இதழில் பொன்னியின் புதல்வர் ஆரம்பமாகிறது.

# நீல முகப்பு
# 955




ஒளி
சக்தி
பாதுகாப்பு



## எவரெடி 955
## அதன் விலைக்கு சிறந்த மதிப்பு அளிக்கிறது

**உழைப்பு**–சக்தி வீணாகிப்போவ தில்லை. ஆதலால், நல்ல நீடித்த உழைப்பிற்கான கூடுதல் சக்தியைப் பெறுகிறீர்கள்.

**சக்தி**–விசேஷ உலோகத்தாலான அடிப்பாகம் பாட்டரிக்குப் பாட்டரி இடைவிடாத தொடர்பை நிச்சயப் படுத்தி அதனால் உண்டாகும் சக்தியனைத்தையும் வழங்குகின்றது.

**பாதுகாப்பு**–ஒன்றின்மேல் ஒன்றுள்ள தடிப்பான ஜாக்கெட் ஒழுகிச் செல்வதைத் தவிர்க்கின்றது– உங்கள் டார்ச்சையும் பாதுகாக்கின்றது.

UC 7954

# எவரெடி
-உன்னதமானவைகளில் முதன்மையானது

கல்கி

மலர் 34
இதழ் 1



# புட்டோவின் இந்தியா ஜுரம்

சிம்லா சூழலைச் சிதைத்துவிட்டார் புட்டோ. பாகிஸ்தானுடன் நாம் செய்து கொண்ட சிம்லா, தில்லி ஒப்பந்தங்களின்படி இங்கிருந்த பாகிஸ்தானிய ராணுவக் கைதிகள் தாய்நாட்டுக்குத் திருப்பி அனுப்பப்பட்டுவிட்டனர். பாகிஸ்தான் நம்மிடம் இழந்த பிரதேசங்களைத் திரும்ப அதனிடமே ஒப்படைத்தாகிவிட்டது.

புட்டோவின் எண்ணம் நிறைவேறிவிட்டது. இனி அவருக்குச் சிம்லா சூழல் தேவையில்லை; கருவேப்பிலை! நாம் நீட்டுகிற சிநேகக் கரத்தைத் தட்டிவிட்டுவிட்டு அட்டகாசமாகப் பேசுகிறார். அதற்கு அனுசரணையாக அமைந்தது அணு வெடிச் சோதனை. இந்தச் சாக்கு இல்லாவிட்டால் வேறு ஒரு காரணம் கண்டுபிடித்திருப்பார் புட்டோ. அவருக்கா கற்றுத் தர வேண்டும்!

நட்புறவை அவர் நலியச் செய்வதன் நோக்கம் என்ன? பாகிஸ்தானில் உள்நாட்டு நிலவரங்கள் சரியில்லை. மக்களிடையே உள்ள அதிருப்தி ஆட்சியிடம் கோபமாக மாறாதிருக்க அவர் கையாளும் தந்திரம் இது. 'இந்தியா, ஆப்கானிஸ்தானம் என்ற இரட்டை எதிரிகளுக்கிடையில் பாகிஸ்தான் அகப்பட்டுக் கொண்டிருக்கிறது; இந்த இக்கட்டிலிருந்து நாட்டைக் காப்பாற்ற என்னால்தான் முடியும்' என்பதுபோல் பேசி அவர் மக்களின் ஒத்துழைப்பைப் பெற முயல்கிறார்.

இன்னொரு நோக்கமும் உண்டு. பங்களா தேச விடுதலைப் போருக்குப் பின்னர் அமெரிக்கா நிறுத்தி வைத்த ஆயுத உதவியை முன்னைவிடப் பன்மடங்காக்கிப் பெறுவதற்கு ஏற்ற சூழலை உருவாக்குகிறார் என அனுமானிக்கலாம்.

அரசியல் சாகசங்களில் — ஸ்டண்ட் வேலைகளில் — அவர் நிபுணர். இந்தியாவை மட்டுமல்ல, ஆப்கானிஸ்தானத்தையும் அவர் எதிர்ப்பாராம், ஒரே சமயத்தில்! மார் தட்டுகிறார்! இந்தியாதான் ஆப்கானிஸ்தானத்தைத் தனக்கு எதிராகத் தூண்டி விடுகிறதாம்! கதை அளக்கிறார்!

'ஏதோ உளறுகிறார், பேசிவிட்டுப் போகட்டுமே' என்று நாம் சும்மா இருந்துவிட முடியாது. பேசப் பேச அந்தப் பேச்சின் காரணமாகவே செயலில் இறங்க வேண்டிய நிர்ப்பந்தமும் அவருக்கு ஏற்பட்டுவிடலாம்.

ஏற்கனவே ராணுவத்தைப் பலப்படுத்தும் முயற்சியில் தீவிரமாய் இறங்கி, ஏராளமான போர்த் தளவாடங்களை இறக்குமதி செய்திருக்கிறார் புட்டோ. பட்ஜெட்டில் கணிசமான அளவு நிதி இதற்கு ஒதுக்கி அமெரிக்காவிலிருந்து நேரடியாகப் பெற முடியாத தளவாடங்களை மூன்றாம் நாடு மூலமாகப் பெற்றுள்ளார். சீனா, பிரான்ஸ் ஆகிய நாடுகளின் நேரடி உதவியும் கிடைத்திருக்கிறது.

ஆப்கானிஸ்தான் எல்லையில் மட்டுமின்றி காஷ்மீர் எல்லையிலும் பாக் துருப்புக்கள் குவிக்கப்படுகின்றன. இதனால், 'இந்தியா எந்த ஆக்கிரமிப்பையும் சமாளிக்கும் ஆற்றலுடையது; நமது ராணுவம் எதற்கும் தயாராயுள்ளது' என்று பிரதமரும் கூறும்படியாயிற்று.

யுத்தம் வரவேண்டாம்; வேண்டவே வேண்டாம்! இரு நாடுகளுக்குமே அது நல்லதல்ல. ஆனால் நாம் கோராத யுத்தம் வந்துவிட்டால் விடமாட்டோம்!

ஒரு மானெக்ஷா என்ன, ஒன்பது மானெக்ஷாக்கள் இங்கே தோன்றுவார்கள். போர் வீரர்கள் எங்கே எங்கே என்று காத்துக் கொண்டிருக்கிறார்கள். அப்புறம் பாகிஸ்தான் எங்கே எங்கே என்று உலகப் படத்தில் தேடும்படியாகிவிடலாம்!

'நுணலும் தன் வாயால் கெடும்' என்கிற பழமொழி, புட்டோ காரணமாக பாகிஸ்தான் விஷயத்தில் உண்மையாகிவிடக் கூடாதே என்பதுதான் நம் கவலை.

புட்டோவின் 'இந்தியா ஜுரம்' தணியப் பிரார்த்திப்போம்!

# தலையாய கூந்தல் அலங்கார நிபுணர்கள் சிபாரிசு செய்வது க்ளீம் ஷாம்பு— கேசத்தைப் பட்டுப்போல் சுத்தமாகவும், படியும்படியும் வைப்பதற்கு.



க்ளீம் ஷாம்பு கார நீரிலும் மென்னீரிலும் நுரை கொழிக்கச் செய்கிறது. கேசத்தைத் துப்புரவாக சுத்தம் செய்கிறது. பட்டுப் போலவும் பளபளப்பாகவும் ஆக்குகிறது.



புது டில்லியைச் சேர்ந்த கூந்தல் அலங்கார நிபுணர் மேடம் பி. ராய் க்ளீம் ஷாம்புவைப் பாராட்டுகிறார். "கேசத்தை மிருதுவாகவும் படியும் படியும் வைக்கிறது. கேசம் நீளமானாலும் குட்டையானாலும் விரும்பும் வகையில் படியவைக்க உதவுகிறது க்ளீம்" என்கிறார் அவர்.

க்ளீம் ஷாம்பு கேசம் படிவதற்கும் நவீன கூந்தல் அலங்காரத்துக்கும் துணை புரிகிறது.



அதன் பிரெஞ்ச் நறுமணத்தை நீங்கள் மிகவும் விரும்புவீர்கள். அதிகபட்ச சிக்கனம் பெற 400 மி.லி. பாட்டில் வாங்குங்கள்.






# க்ளீம் ஷாம்பு

**கார நீரிலும் மென்னீரிலும் நுரை கொழிக்கிறது.**

3 சைஸ்கள் : 100 மி.லி., 200 மி.லி., 400 மி.லி.

Geoffrey Manners & Co. Ltd.



# கல்கி


ஆனந்த ஆடி 19 □ ஆகஸ்டு 4, 1974


## ஓர் உறுதிமொழி !

ஏற்கெனவே அறிவிக்கப்பட்ட பல ரசமான அம்சங்களைத் தவிர இந்தச் சிறப்பிதழில் சென்ட்ரல் ஸ்டேஷனில் ரயில் பயணிகள் டாக்ஸிக்காகப் படும் அவதி பற்றிய கட்டுரையும் புகைப் படங்களும் இடம் பெறுகின்றன. போனஸ்!

நலம்வளம் என்ற தொடரின் முதல் கட்டுரை ஜெயப்பிரகாஷின் இளைஞர் இயக்கம் தொடங்கி யுள்ள பாட்னாவைப் பற்றியது. நமது உதவி ஆசிரியர் "[illegible]" நேரில் சென்று நிலைமையை அலசி ஆராய்ந்து எழுதியது.

உங்கள் கல்கி பத்திரிகைக்கு முப்பத்திநாலாம் ஆண்டு பிறக்கிறது. வயது கூடுவதுடன் விலையும் கூடி யிருக்கிறது. விலை உயர்வுக்கு ஏற்பப் பத்திரிகையின் தரமும் கூடவேண்டுமென்பதற் காக முழுமூச்சுடன் உழைக்க உறுதி பூணு கிறோம், பத்திரிகையின் பிறந்த தினத்தன்று.

மற்றொரு சிறப்பிதழ் பற்றிய அறிவிப்பை அடுத்த இதழில் நேயர்கள் காணலாம்!

— ஆசிரியர்

---

| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 30-00 | ரூ. 15-00 |
| இதர நாடுகள் | ரூ. 60-00 | ரூ. 30-00 |
| இலங்கை | ரூ. 44-00 | ரூ. 22-00 |

---

# பச்சிள மேனியைக் காப்பதற்கே
# பாப்பா காட்டும் வழி உமக்கே

## ஜான்ஸன்ஸ்* பேபி பவுடர்—

மேனியிலே அதி நுட்பமான பகுதி- உங்கள் முகத்தின் சருமம்: பச்சிளம் தளிர் போன்ற அதனைப் பாதுகாக்கத் தக்க பவுடர் எது? பாப்பாவின் மேனியைக் காப்பாற்றும் பூப்போன்ற மென்மையான பவுடரே தேவை. மழமழ மென்மையோடு குளுமையாக வைத்திருப்பதற்கு — ஜான்ஸன்ஸ் பேபி பவுடர். எங்கெங்குமே, எழில்கொஞ்சும் இளம் செல்வியர் உபயோகிக்கும் பவுடர்.

**பிறந்த நலனைப் பிஞ்சு மென்மையோடு**
**உங்கள் மேனி மிளிரப் பேருதவி**

*Johnson & Johnson**





# என்ன சேதி?



### "திக்கற்ற பார்வதி"

**1973**ம் ஆண்டில் எடுக்கப்பட்ட தமிழ் மொழிப் படங்களில் சிறந்தது என்று திக்கற்ற பார்வதிக்கு மத்திய அரசின் பரிசு கிடைத்திருக்கிறது. இந்தியாவில் தயாரான படங்களுள் சிறந்தது என்று தீர்மானமாகாவிட்டாலும் ''திக்கற்ற பார்வதி'' திக்கற்றுப் போய்விடவில்லை என்பது ஆறுதல் அளிக்கிறது!

ராஜாஜி அவர்கள் திரையுலகத்தைப் பற்றி எத்தகைய அபிப்பிராயம் கொண்டிருந்தார் என்பது நாடறிந்த விஷயம். சினிமா நல்ல கருவிதான் என்பதில் அவருக்கு எள்ளளவும் சந்தேகமில்லை. அதில் ஈடுபட்டுள்ளவர்களின் பணப் பேராசை காரணமாக மட்டரகமான



படங்கள் வெளியாகின்றன. இது பாரத நாட்டு மக்களின் ஒழுக்கத்தைக் குலைக்க ஏதுவாகின்றது என்பதுதான் அவர் வருத்தம். இதன் காரணமாக சினிமா உலகமே முற்றிலும் இல்லாமலிருந்தால் கூடப் பரவாயில்லை என்று கருதினார். இத்தகைய எண்ணம் கொண்டிருந்தவரிடம் சிங்கீதம் சீனிவாசராவ் சென்று அவருடைய கதைகளில் சிறந்ததான திக்கற்ற பார்வதியைத் திரை ஓவியமாக எடுக்க அனுமதி வேண்டும் என்று கேட்டாரே, அந்தத் துணிச்சலே பாராட்டுக்குரியதுதான்! அப்போது வியாபார நோக்கமின்றி உன்னத கலைப் படைப்பாகத் திக்கற்ற பார்வதியைப் படமாக்குவதாக வாக்களித்தார். அந்த வாக்கினை முற்றும் நிறைவேற்றிவிட்டார். அதற்கு உறுதுணையாக நின்று உதவியவர் பார்வதி பாத்திரத்தை ஏற்று நடித்த நடிகை லட்சுமி. அவரும் படம் உருவாக ஒத்துழைத்த இதர கலைஞர்களும் தமிழ் மக்களின் பாராட்டுக்குரியவராகிறார்கள்.

அண்டை மாநிலமான கேரளம் இவ்வாண்டு சிறந்த திரைப்படங்களுக்காக இரட்டைப் பரிசு தட்டிக் கொண்டு போயிருக்கிறது. மலையாளத் திரை உலகை வாழ்த்துகிறோம். இந்தியாவிலேயே சிறந்த படம் என நிர்மால்யமும் மாநிலத்தின் சிறந்த படம் என காயத்ரியும் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளன.

கேரளத் திரையுலகு ஏற்கனவே பெற்றுள்ள பல சிறப்புக்களுடன் இந்தப் புதிய இரட்டைச் சிறப்பும் சேர்ந்து கொள்கிறது. தமிழ்த் திரையுலகுக்கு ரோஷம் பிறக்கட்டும்! தமிழர் படை தலை குனியட்டும் !

### ராஜிநாமா செய்யுங்கள் !

**ப**ண வசதி இருக்கிறதா என்று பாராமல் டம்பாச்சாரி திட்டங்களைத் தீட்டியது மத்திய அரசு. துரித லாபம் காண முடியாத ராட்சச ஆலைகள். அரசின் ஊதாரிச் செலவினங்கள் இவற்றுக்கு வரிப் பணம் போதாமல் போன போது செலவுகளைக் குறைக்கவோ திட்டங்களைக் கைவிடவோ முன்வரவில்லை. அதற்குப் பதில் பற்றுக்குறையை ஈடுகட்ட நோட்டுக்களை அச்சடித்துத் தள்ளியது. பலன் பணவீக்கம், விலைவாசி உயர்வு !

இந்தக் கொள்கைதான் நாட்டின் பொருளாதாரச் சீரழிவுக்கு முக்கிய காரணம் என்பதை அமைச்சர் சாவன் பாராளுமன்றத்திலேயே ஒப்புக் கொண்டு விட்டார்.

ஒப்புக் கொண்ட பிறகும் பதவியைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருக்கிறார் ! வெட்கக்கேடு !

மத்திய அரசு இதுவரை கையாண்டு வந்துள்ள பொருளாதாரக் கொள்கைகள் படுதோல்வி அடைந்துள்ளன என்பது வெட்ட வெளிச்சமான பிறகும் நிதி அமைச்சருக்கு அங்கு என்ன வேலை? ராஜிநாமா செய்யட்டும் ! பிரதமர் ராஜிநாமாவை ஏற்று, அரசியல் ரீதியான தமது பிடிவாதங்களைத் தளர்த்தி அறிவுபூர்வமான பொருளாதாரக் கொள்கைகளை வகுக்கக்கூடிய நிபுணர் குழுவிடம் பொறுப்பை ஒப்படைக்கட்டும்.

இடைக்கால பட்ஜெட்டும் மேலும் மேலும் புது வரிகளும் அதிகார பலத்தைக் காட்டுவனவாக அமையலாம்; பொருளாதாரச் சேற்றுக் குட்டையைத் தெளிவாக்கப் போவதில்லை. இதில்தான், இப்படித்தான் உழலுவேன் என்பது மூர்க்கப் பிடிவாதம்.

### அரிசிப் பஞ்சமும்
### அறிவுப் பஞ்சமும்

**ரூ**பாய்க்கு மூன்று படி அரிசி என்று மார் தட்டிய தி.மு.க. அரசு பாரதத்தின் நெற்களஞ்சியம் என்று பெயர்பெற்ற தஞ்சையிலேயே படி நாலு ரூபாய் என்று அரிசி விற்பதைக் கண்டு கையைப் பிசைந்து கொண்டு நிற்கிறது. தஞ்சை மக்கள் 'க்யூ' வரிசையிலே நிற்கிறார்கள்! 'இப்போது விலை இறங்குமுகமாக இருக்கிறது; ஐந்து பைசா குறைந்துவிட்டது, பத்து பைசா குறைந்துவிட்டது' என்று அறிக்கை விடுகிறார் சிவில் சப்ளை அதிகாரி. ஐயோ, பாவம் !

இந்த நிலைக்கு முழுப் பொறுப்பையும் தி.மு.க. அரசுதான் ஏற்க வேண்டும். தீர்க்க தரிசனமற்ற அதன் கொள்கையே இதற்குக் காரணம். போதாக் குறைக்குப் பருவ மழை பொய்த்ததால் குறுவைச் சாகுபடி மிகவும் பாதிக்கப்பட்டுள்ளது. இதை எண்ணினால் அடுத்த சில மாதங்களில் விலைவாசிகளின் நிலை என்னவாக இருக்குமோ என்று கதி கலங்குகிறது.

தஞ்சையில் மலிவான அரிசிக்குத்தான் பஞ்சம் என்று நினைப்போமானால் மக்களின்

பொது அறிவுப் பசிக்குக்கூட உணவு கிடைக்காது போலிருக்கிறது. தஞ்சை மாநிலம் முழுவதும் நூலகங்களில் நாளிதழ்களோ, வாரப் பத்திரிகைகளோ வாங்கக் கூடாதென உத்தரவு பிறப்பித்திருக்கிறார் மாநில நூலக ஆணையாளர்! 'நூலகம் என்றால் நூல்கள் தாமே இருக்க வேண்டும், பத்திரிகைகள் எதற்கு?' என்று நினைத்தாரோ, என்னவோ! அதிலும் மந்திரிகள் எழுதிய புத்தகங்கள் அல்லது மந்திரிகளின் படங்கள் உள்ள நிலை விதழ்களுக்கு முக்கியத்துவம் தரப்படலாம்.

நல்ல வேளை, நூலகம் என்றால் நூலைப் பேல் பேலாக அடுக்க வேண்டும் என்று கருதி நூற்பாலைக்கு ஆர்டர் அனுப்பாமல் இருக்கிறார்களே; அந்த மட்டும் விசேஷம்தான்!

## பிரஞ்சு அரசி தோற்றுப் போனார்!

ரொட்டி இல்லாமல் பசித்து வாடிய மக்களைப் பார்த்து, ரொட்டி இல்லாவிட்டால் என்ன, கேக் சாப்பிடக் கூடாதா என்று கேட்டாள் ஒரு பிரஞ்சு அரசி.

அந்தப் புத்திசாலித்தனத்துக்குக் கொஞ்சமும் குறைந்துவிடாதபடிக்கு நமது பிரதமர், ''அவசியமானதை மட்டும் வாங்குங்கள்'' என்று மக்களுக்கு அறிவுரை வழங்கியிருக்கிறார். அடடா! என்ன அற்புதமான யோசனை!

ஏற்கனவே விலைவாசி உயர்வைத் தாக்குப் பிடிக்க முடியாமல் இந்நாட்டின் பெரும்பான்மையினரான நடுத்தர வர்க்க மக்கள் ஒருவேளை காப்பி, ஒரு வேளை சமையல் என்ற நிலைக்கு வந்துவிட்டார்கள். அவசியமானதை வாங்கவே அவர்களிடம் உள்ள காசு காணாதபோது பிரதமரின் உபதேசப்படி பார்த்தால் ஒருவேளைக் கஞ்சியோடு நிறுத்திக் கொள்ள வேண்டியதுதான்!

அவசியத்துக்கு அதிகமாக வாங்குவோர் யார்? சாமானியரா? நடுத்தர வர்க்கத்தினரா? இல்லை, இல்லவே இல்லை. சாதாரணமாய்ச் செல்வந்தர்கள் என்று நாம் கருதக் கூடியவர்கள்கூட தேவைக்கு அதிகமாக எதுவும் வாங்கமாட்டார்கள். இன்றுள்ள வரிச் சுமை அவர்களை அப்படிச் செலவழிக்க அனுமதிக்காது. தாறுமாறாகச் செலவழிப்பவர்கள் கறுப்புப் பணம் உள்ளவர்கள்தாம். கறுப்புப் பணத்தை ஒழிக்க வழி செய்யாமல் ஊருக்கு உபதேசம் பண்ணினால் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்வதுதான் நிகர லாபம்!

## தண்ணீருக்குக் கண்ணீர்!

தண்ணீருக்கு அல்லல்படும் மக்களுக்காகச் சொட்டுச் சொட்டாகக் கண்ணீர் விட்டுக் கொண்டிருந்தன சென்னை கார்ப்பொரேஷன் குழாய்கள். இப்போது அந்தக் கண்ணீரும் வறண்டுவிட்டது! ஏழைபாழைகள் குடத்தைத் தூக்கிக் கொண்டு தெருத் தெருவாக நடந்து கிணறு உள்ள வீடுகளில், 'அம்மா தண்ணீர்!' என்று பிச்சை எடுக்கும் நிலைக்கு வந்துவிட்டார்கள்.

இந்தச் சூழலில் வீராணம் ஏரித் தண்ணீர் 1975 இறுதிக்குள் சென்னைக்கு வந்துவிடும் என்ற உறுதி மொழி கொஞ்சம் ஆறுதல் அளிக்கிறது. திட்டமிட்டதைவிடச் செலவு அதிகரித்திருக்கிறது என்பதைக் காணும்போது வருத்தமாயிருந்தாலும் அத்தியாவசியமான பணி என்று ஆறுதல் அடையலாம். பணம் தண்ணீராகச் செலவானாலும் சென்னை மக்களுக்குத் தண்ணீர் குறைவின்றிக் கிடைத்தால் சரி என்று சமாதானப்படுத்திக் கொள்ளலாம். ஆனால் கூவத்தின் மணம் வீராணம் ஏரிக்கு எட்டிவிடாமல் மட்டும் கவனித்துக் கொள்ளட்டும் அரசு.

ராஜாஜி சிந்தனை

# அடிமைப்பட்ட குதிரை

புல்வெளியில் மேயத் தனக்குப் போட்டியாக வந்த மானைப் பற்றி மனிதனிடம் புகார் செய்தது குதிரை. மனிதன் குதிரைக்குச் சேணமும் கடிவாளமும் போட்டு ஆரோகணித்தான். குதிரைச் சவாரி செய்து மானை விரட்டியடித்தான்.

இப்போது குதிரை விடுதலை கோரியது. மனிதன் சொன்னான்: ''நீ எவ்வளவு உபயோகமான மிருகம் என்பது இன்றுதான் தெரிந்தது. உனக்குத் தீனி போடுகிறேனே, போதாதா? சுதந்திரம் எதற்கு?''

இது ஈஸாப் கதை. அரசாங்கப் பொருளாதாரம் என்பது இப்படித்தான் சுதந்திரமாக இயங்க வேண்டிய மனித சக்தியை அடிமைப்படுத்துகிறது.

'உயிர், உடைமை, சுதந்திரம் ஆகியன ஒன்றுடன் ஒன்று பிணைந்து ஒன்றானவை. உயிரை விட்டு வைத்துச் சுதந்திரத்தைப் பறித்தால் அனைத்தையும் பறித்ததாகும். வாழ்க்கை பயனற்றதாகிறது. சுதந்திரத்தை மனிதனுக்கு அளித்து அந்தச் சுதந்திரத்தால் அவன் அடைந்த பயனை — செல்வத்தை — பிடுங்கிக் கொண்டால் அப்போதும் அவன் அடிமை நிலையில் உழல்பவனாகவே இருக்கிறான்.'

இவ்வாறு ஜஸ்டிஸ் சதர்லாண்ட் கூறியுள்ளார். மக்கள் அரசாங்கத்தால் பயன்பெறலாம் என்று நினைத்துச் சுதந்திரங்களை விட்டுக் கொடுத்தால் ஈஸாப் கதையில் வந்த குதிரையின் நிலைக்குத் தாழ்வார்கள்.

சுயராஜ்யா, அக்டோபர் 13, 1962.

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள்

# இன்னல் தருவதும் அவள் இன்னருளே



2

கழுதைமேலே உப்புப் பொதி போட்டுக் கொண்டு ஒருத்தன் வேற்று ஊர் சந்தைக்குப் போனான். அந்தக் காலத்தில் உப்பு மூட்டையை மாட்டு மேலே, கழுதை மேலேதான் போட்டுக் கொண்டு போவார்கள். அப்படிப் போனான் இந்த வியாபாரி. போகிறபோது மப்பு மந்தாரம் ஒன்றும் இல்லை. ஆனால் நடு வழியில் திடீரென்று மழை பிடித்துக்கொண்டு வெளுத்துக் கட்டி விட்டது. உப்புப் பொதி என்ன ஆகிறது? எல்லாம் அப்படியே கரைந்து போயிற்று. வியாபாரிக்கு ஸ்வாமி மேலே மகா கோபம் வந்து விட்டது. 'ஏழை என் வயிற்றில் இப்படி இந்தத் தெய்வம் அடித்து விட்டதே. கருணையில்லாத சாமியை இனிமேல் கும்பிடுவதுமில்லை' என்று முடிவு பண்ணி விட்டான். வீட்டுக்குத் திரும்ப நடையைக் கட்டினான். வருகிற வழி காட்டு வழி. இருந்தாலும் இவன் மாதிரி பல வியாபாரிகள் கூட வந்த தைரியத்தில் காட்டு வழியாக வந்தான். காட்டிலே திருடர்கள் இவர்களை எதிர்பார்த்துக் கொண்டு மறைந்திருந்தார்கள்.

'சந்தையிலே விற்பனை நடத்தி வியாபாரிகள் நிறையப் பணம் கொண்டு வருவார்கள். துப்பாக்கியால் சுட்டு அவர்களிடம் இருக்கிற பணத்தை எல்லாம் பிடுங்கிக் கொள்ளலாம்' என்று திருடர்கள் ஆசையாகக் காத்துக் கொண்டிருந்தார்கள். துப்பாக்கி வைத்துக் கொண்டிருக்கிறவர்களிடம் வியாபாரிகள் எத்தனை பேர் சேர்ந்திருந்தாலும் என்ன செய்ய முடியும்? எல்லோரும் நடுநடுங்கிப் போனார்கள். அந்தக் காலத்திலே தோட்டா துப்பாக்கி கிடையாது. வெடிமருந்து கெட்டித்துத்தான் அதை வைத்துச் சுடுவார்கள். துப்பாக்கிச் சூட்டுக்கு ஆளே அகப்பட்டாலும் சரி; இல்லா விட்டாலும் அவரவரும் உடைமைகளைப் போட்டு விட்டுத் திக்குக்கு ஒருத்தராக ஓடி விடுவார்கள், எப்படியானாலும் திருடர்களுக்கு வேட்டைதான்! இன்றைக்கும் இப்படி மருந்து போட்டுச் சுட்டார்கள். ஆனால் மருந்து வெடிக்கவேயில்லை. பெரிதாக மழை பெய்திருந்தது அல்லவா? தோட்டாவாக இருந்தால் எந்த மழைக்கும் ஈரம் காக்காது. மருந்து அப்படியில்லை. ஈரம் ஜாஸ்தியானால் வெடிக்காது. துப்பாக்கியால் சுட்டதெல்லாம் வெறும் புஸ்வாணமாயிற்று. இப்போது ஆயுத பலம் இல்லாத திருடர்களுக்குப் பயம் எழுந்தது. வியாபாரிகள் பணத்தைப் போட்டு விட்டு ஓடுவதற்குப் பதில், திருடர்களே துப்பாக்கிகளைப் போட்டு விட்டு ஓட்டம் பிடித்தார்கள். முதலில் சொன்னேனே, அந்த வியாபாரிக்கு இப்போதுதான் தெய்வத்தை நிந்தித்தது எத்தனை தப்பு என்று தெரிந்தது. 'மழை வந்ததால் உப்புதான் போச்சு; மழை வராவிட்டால் உயிரே போயிருக்கும். இந்த மழையினால் சின்னக் கஷ்டத்தைத் தந்து, அதே காரணத்தால் பெரிய கஷ்டத்திலிருந்து தப்புவித்தாய். உன் கருணையை என்னவென்று சொல்வது?' என்று ரொம்பவும் மனசு உருகி வேண்டிக் கொண்டான். இப்படிக் கதை.

முந்தி என்ன, பிந்தி என்ன என்று தெரியாமல் கஷ்டம் வருகிற சமயத்தை மட்டும் பார்க்கிறோம். அம்பாளுக்குக் கருணை இருந்தால் ஏன் கஷ்டம் வருகிறது என்று கேள்வி போடுகிறோம். முந்தி நாம் செய்த கர்மம், பிந்தி நமக்கு இந்தக் கஷ்டத்தாலேயே வரப் போகிற நன்மை இவை மட்டும் தெரிந்து விட்டால் நாம் இப்படிச் செய்ய மாட்டோம். அது தெரியாதபடி மனிதனை வைத்திருக்கிறாள். அதுவும் அவள் விளையாட்டுத்தான்.

இதெல்லாம் தெரியாதபோதே மனுஷ்யனுக்கு இத்தனை ஆணவம், அகங்காரம் இருக்கிறதென்றால் திரிகாலமும் தெரிந்தால் இவனுடைய அதிக்ரமத்துக்கு எல்லையே இல்லாமல் போய்விடும். இவன் அடங்கிக் கிடக்க வேண்டும் என்றே இப்படி வைத்திருக்கிறாள். ஆனால் இந்த ஸ்திதியிலும் கூட 'நமக்கு முந்தியும் தெரியவில்லை, பிந்தியும் தெரியவில்லை' என்பதையாவது நாமே தெரிந்து கொள்ளலாம். முக்காலமும் தெரிந்தவர்கள் சொல்கிறதை நம்பலாம். சகல ஜகத் வியாபாரமும் காரண காரிய ரீதியில் சட்டம் போட்ட மாதிரி நடக்கிறதைப் பார்த்தே, 'நம் மனுஷ்ய — வாழ்க்கையும் இப்படித்தான் இருக்க வேண்டும்; நாம் கஷ்டப்படுகிறோம் என்றால் அதற்குக் காரணம் இருக்க வேண்டும்; இனிமேல் இந்தக் கஷ்டம் வரக்கூடாது என்றால் அவன்தான் கதி' என்று புத்தி பெறலாம்!

எல்லாக் காலத்திலும் நமக்குப் பந்துவாக, சகாயமாக இருப்பது தாயும் தந்தையுமாக, அம்மையப்பனாக இருக்கிற அவன்தான்.

ஒரு வனிதைக்கு வசதியான இதமான ஆடைகளைத் தந்தால்...

## ...அவளுக்கு மனங்குளிரும் மகிழ்ச்சியும் கிடைக்கிறது !



நிச்சயமாக, மபத்லால் க்ரீப் அளிப்பவை நேர்த்தியான துணிமணிகள்தான் !

AIYARS.M.457 TM

# சிவகாமியின் சபதம்



மூன்றாம் பாகம்

## பிக்ஷுவின் காதல்

அமரர் கல்கி

## முதல் அத்தியாயம்

# அழியா மதில்

**வா**தாபி சக்கரவர்த்தி புலிகேசியின் படைகள், மகேந்திர பல்லவரின் காலத்தில் காஞ்சிக் கோட்டையை முற்றுகையிட்டது, தென்னாட்டின் சரித்திரத்தில் பிரசித்தி பெற்ற சம்பவம்.

ஏறக்குறைய எட்டு மாத காலம் அந்த முற்றுகை நீடித்திருந்தது. எனினும், காஞ்சிக் கோட்டையின் மதில்கள் கன்னியழியாமல் கம்பீரமாகத் தலைதூக்கி நின்றன. வாதாபிப் படையைச் சேர்ந்த வீரன் ஒருவன்கூடக் காஞ்சிக் கோட்டைக்குள்ளே கால் வைக்கவும் முடியவில்லை.

வாதாபிப் படைகள் காஞ்சிக் கோட்டையைச் சூழ்ந்து கொண்டவுடனே, வைஜயந்தி பட்டணத்தில் செய்தது போலவே ஓரே மூர்க்கமாய்க் கோட்டையைத் தாக்கிக் கைப்பற்ற யத்தனித்தார்கள். காலாட் படையைச் சேர்ந்த கணக்கற்ற வீரர்கள் ஏக காலத்தில் கோட்டையின் நாற்புறத்திலும் அகழிகளை நீந்திக் கடக்க முயன்றார்கள். கோட்டை மதில்களின் மேல் மறைவான இடங்களிலிருந்து மழைபோல் பொழிந்த அம்புகளும், அகழியிலிருந்த முதலைகளும் அவ்வீரர்களையெல்லாம் யமலோகத்துக்கு அனுப்பின. தப்பித் தவறிக் கரையேறிய வீரர்கள் கோட்டை மதிலோரமாகக் கண்ணுக்குத் தெரியாமல் அமைந்திருந்த பொறிகளில் அகப்பட்டுத் திண்டாடினார்கள். ஆங்காங்கு அகழிகளில் இறங்கிய யானைகளுக்கும் அகழியின்ருந்த முதலைகளுக்கும் பயங்கரமான போராட்டம் நடந்ததில், அகழியில் நிறைந்திருந்த தண்ணீரெல்லாம் செந்நீராக மாறியது.



முதல் முயற்சியில் தோற்ற பிறகு, கோட்டை வாசல்களுக்கு எதிரே அகழியைத் தூர்த்துக் கோட்டைக் கதவுகள் மேல் யானைகளை மோதச் செய்ய முயன்றார்கள். காஞ்சியைச் சுற்றியிருந்த பெரிய பெரிய விருக்ஷங்களையெல்லாம் மத்தகஜங்கள் வேரோடு பெயர்த்துக் கொண்டு வந்து அகழியில் போட்டுத் தூர்த்தன. ஆனால், இந்த வேலை அவ்வளவு எளிதாக நடக்கவில்லை. கோட்டை வாசலின் மேல் மாடங்களில் மறைவான இடங்களிலிருந்து பல்லவ



வீரர்கள் வேகமாய் எறிந்த வேல்கள் யானைகளின் கண்களிலும் மற்றுமுள்ள மர்ம ஸ்தானங்களிலும் தாக்க, அவை வீரிட்டுக் கொண்டு திரும்பியோடிச் சளுக்கர் படைகளுக்குச் சேதம் உண்டாக்கின.

பெரும் பிரயத்தனத்தின் பேரில் கோட்டை வாசல்களுக்கு எதிரே அகழிகள் தூர்க்கப்பட்டன. யானைகள் கோட்டைக் கதவுகளை முட்டியபோது, வெளிக் கதவுகள் தகர்ந்தன. ஆனால், வெளிக் கதவுகளுக்கு உள்ளே எதிர்

பாராத அதிசயம் யானைகளுக்குக் காத்திருந்தது. புதிதாய் அமைக்கப்பட்டிருந்த உட்கதவுகளில், நூற்றுக்கணக்கான வேல் முனைகள் பொருத்தப்பட்டிருந்தன. இந்த வேல் முனைகளில் வேகமாய் மோதிக் கொண்ட வாதாபி யானைகள் பயங்கரமாகப் பிளிறிக் கொண்டு திரும்பி, தங்களுக்குப் பின்னுலிருந்த காலாட்படை வீரர்களையெல்லாம் துவம்சம் செய்து கொண்டு ஓடின. பெரிய பெரிய மரக் கட்டைகளைக் கொண்டு வந்து அந்த வேல் முனை பொருந்திய கதவுகளையும் தகர்த்தார்கள். அப்படித் தகர்த்துவிட்டுப் பார்த்தால், அக்கதவுகளுக்குப் பின்னுல் கோட்டை வாசலை அடியோடு அடைத்



துக் கொண்டு கருங்கல்லாலும், சுண்ணும்பாலும் கட்டப்பட்ட கெட்டிச் சுவர் காணப்பட்டது.

இவ்விதமாக, ஏறக்குறைய ஒரு மாத காலம் கோட்டையைத் தாக்கிக் கைப்பற்றுவதற்கு முயன்று தோல்வி அடைந்த பிறகு, நீடித்து முற்றுகையை நடத்திக் கோட்டையில் உள்ளவர்களைப் பட்டினி போட்டுப் பணியச் செய்வதென்று புலிகேசி தீர்மானித்தான். வாதாபிப் படைகள் காஞ்சியைச் சுற்றிலும் நெடுந் தூரம் வரை கூடாரம் அடித்துக் கொண்டு தண்டு இறங்கின.

முற்றுகையை ஆரம்பித்து ஆறு மாத காலம் ஆனபோது, கோட்டைக்குள் இருப்பவர்களுக்கு என்ன ஆபத்து நேரிடுமென்று புலிகேசி எதிர்பார்த்தானே அந்த ஆபத்து வாதாபிப் படைகளுக்கே நேரலாயிற்று. அதாவது, உணவுப் பஞ்சம் நேர்ந்தது. இலட்சக்கணக்கான வீரர்களும், ஆயிரக்கணக்கான போர் யானைகளும், வண்டி இழுக்கும் மாடுகளும் ஒரே இடத்தில் இருந்து கொண்டு எவ்வளவு காலத்துக்கு உணவு பெற முடியும்? வடபெண்ணைக் கரையிலிருந்து காஞ்சி வரையில் உள்ள வழியில் புலிகேசியின் படைகளுக்கு யாதொரு உணவுப் பொருளும் கிடைக்கவில்லை. ஏனெனில், வடபெண்ணையிலிருந்து மெல்ல மெல்லப் பின்வாங்கி வந்த பல்லவ சைனியம், வாதாபிப் படைக்கு உணவுப் பொருள் ஒன்றும் கிடைக்காதபடி நன்றாய்த் துடைத்து விட்டிருந்தது.

அவ்வாறே, காஞ்சியைச் சுற்றிலும் நெடுந்தூரத்துக்கு நெடுந் தூரம் உள்ள கிராமங்களையெல்லாம் சூனியமாக விட்டுவிட்டு ஜனங்கள் போய்விட்டபடியால், வாதாபிப் படைகளுக்கு உணவுப் பொருள் எதுவும் கிடைக்கவில்லை.

இரண்டு மூன்று மாத காலத்துக்குள் காஞ்சியைச் சுற்றியிருந்த காடுகள், தோட்டங்கள் எல்லாவற்றையும் வாதாபியின் யானைகள் அழித்துத் தின்றுவிட்டன. அப்புறம் அவற்றுக்கு ஆகாரம் தேடுவதற்காகப் பல காத தூரம் போகவேண்டியிருந்தது. அப்படிப் போனாலும் அந்த வருஷத்துக் கடுங்கோடையில் பசுமையைக் கண்ணுல் பார்ப்பதே அபூர்வமாயிருந்தது.

இதையெல்லாம் காட்டிலும் மிகப் பயங்கரமான இன்னொர் அபாயம் கோடை முற்றிய போது வாதாபிப் படைகளுக்கு ஏற்பட்டது. அதாவது குடிதண்ணீருக்கே பஞ்சம் உண்டாகி விட்டது.

அந்த வருஷத்தில் காஞ்சியைச் சுற்றிலும் ஏழெட்டுக் காத தூரம் பரவிய பிரதேசங்களில் சில அதிசயங்கள் நடந்து வந்தன. கார்த்திகை, மார்கழியில் தண்ணீர் நிறைந்து ததும்பிக் கொண்டிருந்த பெரிய பெரிய ஏரிகளெல்லாம், தை, மாசி மாதத்தில் எப்படியோ திடீர் திடீரென்று கரையை உடைத்துக் கொண்டு சுற்றுப் பிரதேசங்களை வெள்ளத்தில் மூழ்கடித்தன. இது காரணமாக, சித்திரை மாதத்தில் ஏரிகளில் ஒரு சொட்டுத் தண்ணீர்கூட இல்லை.

ஆங்காங்கு இருந்த கிணறுகளும், குளங்களும் ஏரிகள் உடைத்துக்கொண்டு வெள்ளம் வந்தபோது தூர்ந்துபோய் விட்டன. எங்கேயாவது கொஞ்சம் தண்ணீர் கண்டால் குடிப்பதற்குப் பயனில்லாதபடி அழுகி நாற்றமெடுத்துக் கிடந்தது.

அந்த நாளில் பாலாற்றில் மூன்று இடங்களில் அணைக்கட்டு கட்டித் தண்ணீரைத் தேக்கி வைத்திருப்பார்கள். வேனிற் காலத்தில் சிறிது சிறிதாக விடுவார்கள். இந்த வருஷத்தில் அந்தத் தேக்கங்களை முன்னமே உடைத்துவிட்டிருந்தபடியால் கோடைக் காலத்தில் பாலாறும் வறண்டுவிட்டது. பாலாறு வறண்ட காரணத்தினால் காஞ்சியையும் கடலையும் ஒன்றுசேர்த்த கால்வாயிலும் தண்ணீர் வற்றிப் போய்விட்டது. கோட்டையைச் சுற்றியிருந்த அகழித் தண்ணீரோ, இரத்தமும் நிணமும் சேர்ந்த சேற்றுக் குட்டையாக மாறியிருந்தது.

எனவே, வாதாபியின் இலட்சக்கணக்கான வீரர்களுக்கும் யானைகள், குதிரைகள், மாடுகள் எல்லாவற்றுக்கும் பாலாற்றில் ஊற்றெடுத்தே குடி தண்ணீர் கிடைக்க வேண்டியிருந்தது.

பசி, தாகங்களின் கொடுமையினால் போர் யானைகள் அவ்வப்போது வெறி பிடித்துச் சிதறி ஓட, அவற்றின் கால்களில் மிதிபட்டு வீரர்கள் பலர் எமலோகம் சென்றார்கள்.

* * *

ஆனி மாதத்திலே ஒரு நாள் வராகக் கொடி வானளாவப் பறந்த கூடாரத்துக்குள்ளே புலிகேசியின் யுத்த மந்திராலோசனை கூடிற்று. முன்னே வடபெண்ணை நதிக் கரையில் நாம் பார்த்த அதே படைத் தலைவர்கள் ஏழெட்டுப் பேர், எதிரில் விரித்திருந்த கம்பளத்தில் உட்கார்ந்திருக்க, வாதாபி மன்னன் தந்தச் சிங்காதனத்தில் கம்பீரமாக அமர்ந்திருந்தான்.

முன்னைக் காட்டிலும் புலிகேசியின் முகத்தில் குரூரமும் கோபமும் அதிகமாகக் கொதித்துக் கொண்டிருந்தது. படைத் தலைவர்களைப் பார்த்து, அவன் கூறினான்: "இந்த மகேந்திர வர்மனுக்குத் தகப்பன் பெயர் சிம்ம விஷ்ணு;

## முன்கதைச் சுருக்கம்

இன்றைக்கு ஆயிரத்து முந்நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்னால் மகேந்திர பல்லவ சக்கரவர்த்தி காஞ்சியில் இருந்து அரசு புரிந்து வந்த காலத்தில், பல்லவ சாம்ராஜ்யம் தெற்கே பாண்டிய நாட்டு எல்லையிலிருந்து வடக்கே கோதாவரிக் கரை வரையில் பரவியிருக்கிறது.

சோழ நாட்டு இளைஞன் பரஞ்சோதி, திருநாவுக்கரசர் மடத்தில் சேர்ந்து தமிழ்க் கல்வி கற்க வந்தவன், வழியில் புத்த பிக்ஷு நாகநந்தியைச் சந்தித்து அவருடன் காஞ்சிக் கோட்டைக்குள் நுழைகிறான். வாதாபி மன்னன் புலிகேசியின் படையெடுப்பின் காரணமாகச் சிவகாமியின் நடன அரங்கேற்றம் தடைப்பட்டதும் அதே தினத்தில்தான். வெறிகொண்டு ஓடி வந்த மத யானைமேல் வேலெறிந்து ஆயனச் சிற்பியையும் சிவகாமியையும் தப்புவித்த பரஞ்சோதி அன்றிரவு நகர்க் காவலர்களால் சிறைப்படுத்தப் படுகிறான். நாகநந்தி அவனைத் தப்புவித்து இரகசியப் பாதையின் மூலம் அவனை வெளியேற்றுகிறார். ஆயனருக்கும் நாவுக்கரசருக்கும் ஓலை கொண்டு வந்திருந்த பரஞ்சோதி நாவுக்கரசர் காஞ்சியில் இல்லாததால் ஆயனரிடம் செல்கிறான். அஜந்தாவின் அழியாத வர்ணக் கலையை இரகசியத்தை அறிந்து வரும் பொருட்டுப் பரஞ்சோதியை நாகநந்தியின் ஓலையுடன் ஆயனர் அனுப்புகிறார். மாமல்ல நரசிம்மவர்மரைக் கோட்டையை விட்டு வெளியில் போகக் கூடாதென்று உத்தரவிட்ட அவர் தந்தை மகேந்திரர் போர்க்களம் செல்கிறார்.

ஓலையுடன் சென்ற பரஞ்சோதிக்கு வழியில் வஜ்ரபாகு பழக்கமாகிறான். பரஞ்சோதி அறியாமையால் எடுத்துச் சென்ற தேசத் துரோகமான ஓலை கைமாறி விடுகிறது; வஜ்ரபாகு மாற்று ஓலை எழுதி வைத்து விடுகிறான். வாதாபி வீரர்கள் பரஞ்சோதியைச் சிறைப் பிடித்துச் செல்கின்றனர். வஜ்ரபாகு பரஞ்சோதியை அவர்களிடமிருந்து விடுவித்துப் பல்லவ சைன்யத்துடன் சேர்க்கிறார். பரஞ்சோதியும் மாமல்லரும் சிநேகப் பிரதிக்ஞை செய்து கொள்கின்றனர்.

அரண்ய வீட்டில் சிவகாமிக்கு மாமல்லரிடமிருந்து பல காதல் ஓலைகள் வருகின்றன.

பின்னால் அசோகபுரத்துப் புத்த விஹாரத்தில் தங்கியிருந்த ஆயனரும், சிவகாமியும் திரும்பாதபடி ஏரியின் உடைப்பினால் பெருகிய பெரும் வெள்ளத்தில் சிக்கித் தவிக்கின்றனர். அப்போது மாமல்லரும் மகேந்திரரின் ஒற்றர்களில் ஒருவனான குண்டோதரனும் அவர்களைக் காப்பாற்றி மண்டபப்பட்டுக் கிராமத்தில் கொண்டு போய்ச் சேர்க்கின்றனர்.

மகேந்திரச் சக்கரவர்த்தி, சிவகாமியை அங்கு தனியே சந்தித்து மாமல்லரை மறந்துவிடும்படி வாக்குறுதி கேட்கிறார். சிவகாமி மறுத்து விடுகிறாள்.

மந்திராலோசனையில் மாமல்லர் போர் பற்றிய தம் கருத்தைத் தெரிவித்தபோது சக்கரவர்த்தி பகைவர்களிடம் சிறைப்பட்டு விட்டார் என்ற அதிர்ச்சி தரும் செய்தி கிடைத்து யாவரும் திடுக்கிடுகின்றனர். அச்சமயம் மகேந்திர சக்கரவர்த்தி திடீரென்று சபா மண்டபத்தில் பிரவேசித்து அனைவரையும் வியப்பில் ஆழ்த்துகிறார். பிறகு சக்கரவர்த்தி தாம் வஜ்ரபாகுவாக வேஷம் தரித்துப் புலிகேசியை நேரில் சந்தித்த விவரங்களைச் சொல்கிறார். நாகநந்தி புலிகேசியின் ஒற்றன் என்பதையும் அவனே தூதனாக வந்தவன் என்பதையும் உணர்ந்து அவையோர் திகைக்கின்றனர். வாதாபிப் பெரும் சைனியத்தை வடபெண்ணை நதிக் கரையில் எட்டு மாத காலம் தாமதிக்கச் செய்த மகேந்திரரின் போர்த் திறனையும் வாதாபியின் மிகத் தந்திரசாலியான ஒற்றனைக் கைப்பற்றிய மகேந்திரரின் ஆற்றலையும் கண்டு வியக்கின்றனர்.

மாமல்லன் காஞ்சிக் கோட்டையை விட்டு வெளியேறி எதிரிகளுடன் வீரப் போர் புரியத் துடிக்கிறான். மகேந்திரர் அது யுத்த தந்திரமாகாது, தற்கொலைத் தந்திரமாகும் என உணர்ந்து யுத்தத்தைத் தம் போக்கில் நடத்த மந்திரி மண்டலத்தாரிடம் அனுமதி கோருகிறார்.

காஞ்சி முற்றுகை ஆரம்பமாகிறது.

மகன் பெயர் நரசிம்மன். ஆனால் மகேந்திரனோ வெறும் நரியாக இருக்கிறான். வளையில் நரி புகுந்து கொள்வது போல இவன் கோட்டைக்குள்ளே புகுந்து கொண்டிருக்கிறான். நரி வளையிலிருந்து வெளியே வருமென்று எத்தனை நாளைக்குத்தான் காத்துக் கொண்டிருப்பது? உங்களில் யாருக்காவது ஏதாவது யோசனை தோன்றுகிறதா?''

படைத் தலைவர்கள் மௌனமாக இருந்தார்கள். ஒருவராவது வாய் திறந்து பேசத் துணியவில்லை.

''ஏன் எல்லோரும் மௌனம் சாதிக்கிறீர்கள்? வெற்றி மேல் வெற்றி கிடைத்துக் கொண்டிருந்தபோது, நான் நீ என்று எல்லோரும் யோசனை சொல்ல முன் வந்தீர்கள். யோசனை தேவையாயிருக்கும்போது வாய மூடிக் கொண்டிருக்கிறீர்கள். ஆகா! நமது பிக்ஷு மட்டும் இப்போது இங்கிருந்தால்...?'' என்று சொல்லிப் புலிகேசி பெருமூச்சு விட்டான். சபையில் ஒருவன் ''பிரபு! பிக்ஷுவைப் பற்றி எந்த விதமான தகவலும் வரவில்லையா?'' என்று கேட்டான்.

''பிக்ஷுவிடமிருந்து சேதி வந்து நெடுங்காலம் ஆகிறது. வடபெண்ணைக் கரையில் வஜ்ரபாஹு என்னும் களப்பாளத் தலைவனிடம் அனுப்பிய ஓலைக்குப் பிறகு அவரிடமிருந்து ஒரு தகவலும் இல்லை. மதுரைப் பாண்டியனைப் பார்ப்பதற்கு அவர் போயிருந்த சமயத்தில் ஏதேனும் நேர்ந்து விட்டதோ என்னவோ? ஆகா! பிக்ஷு மட்டும் இப்போதிருந்தால் உங்களைப் போல் விழித்துக் கொண்டிருப்பாரா? ஒற்றர் தலைவரே! புத்த பிக்ஷு என்ன ஆகியிருப்பார் என்று கண்டுபிடிக்கும் படியாக எட்டு மாதங்களுக்கு முன்னாலேயே சொன்னேனே? இதுவரை ஏதாவது தகவல் கிடைத்ததா?'' என்று கேட்க, ஒற்றர் படைத் தலைவன் தலை குனிந்து கொண்டான்.

பிறகு, புலிகேசி அங்கே எல்லோருக்கும் முதலில் இருந்தவனைப் பார்த்து, ''சேனாதிபதி! உமக்கு என்ன தோன்றுகிறது? முற்றுகையைத் தொடர்ந்து நடத்த வேண்டியதுதானே? மகேந்திர பல்லவனைப் பணியச் செய்ய இன்னும் எத்தனை காலம் பிடிக்கும் என்று நினைக்கிறீர்?'' என்று கேட்டான்.

அதற்கு வாதாபி சேனாதிபதி, ''மதில் மேல் காணப்படும் பல்லவ வீரர்கள் கொஞ்சம் கூட வாட்டமின்றிக் கொழுத்தே காணப்படுகிறார்கள். ஆனால், நம்முடைய வீரர்களுக்கு இப்போது அரை வயிறு உணவுதான் கொடுக்கிறோம். இன்னும் ஒரு மாதம் போனால் அதுவும் கொடுக்க முடியாது. சுற்றுப்புறத்தில் பத்துக் காத தூரத்துக்கு ஒரு தானிய விதைகூடக் கிடையாது'' என்றார்.

புலிகேசியின் முகத்தில் கோபம் கொதித்தது. ''ஆமாம், ஆமாம்! எப்போது பார்த்தாலும் இந்தப் பஞ்சப் பாட்டுத்தான். இம்மாதிரி மூக்கால் அழுவதைத் தவிர, வேறு ஏதாவது யோசனை சொல்லுவதற்கு இங்கு யாரும் இல்லையா?'' என்று கோபக் குரலில் புலிகேசி கேட்க, படைத் தலைவர்களில் ஒருவன், ''பிரபு! காவேரிக் கரையில் ஆறு மாத காலமாகப் பாண்டிய ராஜா காத்துக் கொண்டிருக்கிறார். சோழ வள நாட்டில் சென்ற வருஷம் நன்றாக விளைந்து தானியம் ஏராளமாக இருக்கிறது. ஜயந்தவர்ம பாண்டியருக்கு ஓலை அனுப்பினால், ஒருவேளை அவர் உணவு அனுப்பக் கூடும்'' என்றான்.

இதைக் கேட்ட புலிகேசி சற்று நேரம் ஆழ்ந்த யோசனையில் இருந்தான். பிறகு திடீரென்று துள்ளிக் குதித்து எழுந்து, எல்லாரையும் ஒரு தடவை சுற்றிப் பார்த்துவிட்டு, ''என்ன செய்வதென்று தீர்மானித்துவிட்டேன். இனிமேல் நான் இங்கேயே சும்மா உட்கார்ந்திருந்தால் எனக்குப் பைத்தியமே பிடித்து விடும். சேனாதிபதி! நீர் இங்கேயே நமது சைனியத்தின் பெரும் பகுதியுடன் முற்றுகையை நடத்திக் கொண்டிரும். ஓர் இலட்சம் வீரர்களுடன் நான் தெற்கே புறப்பட்டுச் சென்று பாண்டியமன்னனை நேரில் பார்த்து விட்டு வருகிறேன். யானைப் படை என்னுடன் வரட்டும். ஆஹா! வாதாபியிலிருந்து புறப்பட்டபோது கொழு கொழுவென்றிருந்த நம் யானைகள், உணவில்லாமல் எப்படி மெலிந்து போய் விட்டன! காவேரிக் கரையில் நம் யானைகளுக்கு நிறைய உணவு கிடைக்குமல்லவா?'' என்றான்.

அப்போது ஒற்றர் படைத் தலைவன், ''பிரபு! தாங்கள் அப்படிச் சிறு படையுடன் போவது உசிதமா? பாண்டியனுடைய நோக்கம் எவ்விதமாக இருக்குமோ?'' என்று கூறியதற்குப் புலிகேசி, ''பாண்டியனுடைய நோக்கம் என்னவாக இருந்தாலும் என்ன? அவன் நம்மோடு போர் செய்யத் துணிய மாட்டான். அவன் மோசக் கருத்துள்ளவனாக இருந்தாலும் என்ன செய்து விட முடியும்? காவேரிக் கரையில் ஒளிந்து கொள்ளுவதற்குக் கோட்டை ஒன்றும் இல்லை. எதிரி போர்க் களத்தில் நிற்கும் வரையில் எனக்குப் பயமும் இல்லை'' என்றான்.

(தொடரும்)

# எதை அளிக்கிறீர்கள் உங்கள் கேசத்துக்கு?

அசட்டையா?



எண்ணெய்ப் பசையா?



தடவுங்கள் பேண்ட்டீன்!



# உங்கள் கூந்தல் எப்படி இருக்க வேண்டும் என்று விரும்புவீர்கள்?

பிசுக் பிசுக் என்று?



சோடையாகவா?



பேண்ட்டீன் செழிப்பு?



**மயிருதிர்வதைத் தடுக்கும், எண்ணெய்ப் பசை யற்ற கேச அலங்கார சாதனம் பேண்ட்டீன்**




Creative Unit-A 1180

# நீல வானத்தில் வெள்ளை நாரைகள்

வெ. ஜானகி



அதிக எதிர்ப்பின்றிச் சரணடைந்து விட்டது அந்தக் கிராமம்.

இரவு முகாமுக்கு வசதியான இடம் கிடைத்து விட்டது என்ற சந்தோஷத்தில் வெற்றி பெற்ற வீரர்கள் லாரிகளிலும், ஜீப்புகளிலும் கிராமத்தின் குறுகலான சந்துகளில் பவனி சென்று கொண்டிருந்தார்கள்.

ஒரே ஒரு வீரன் மட்டும் கிராமத்தின் தொடக்கத்திலிருந்த ஓர் இடிந்துபோன கட்டிடத்தின் சுவரைப் பற்றியவாறு மெள்ளச் சிரமப்பட்டு நகர்ந்து கொண்டிருந்தான். அவனுடைய சீருடைச் சட்டையின் இடது கை முழுவதும் நனைந்திருந்தது. கருத்த பச்சை வர்ணமாயிருந்த சட்டையில், அது தண்ணீரா, குருதியா என்பதைச் சட்டென்று சொல்ல முடியவில்லை. ஆனால் சற்றுத் தொங்கினாற் போலிருந்த அவனுடைய இடது கையின் விரல்களின் மேல் வழிந்திருந்த சிவப்பு, அந்தச் சந்தேகத்தைப் போக்கிவிட்டது.

அன்று நடந்த சண்டையில் அவன் ஒருவன்தான் அவர்கள் தரப்பில் காயமடைந்திருக்க வேண்டு மென்று அவ்வீரனுக்குத் தோன்றியது. யுத்தக் கணக்குகள்படி பார்த்தால் அது ஒரு சிக்கனமான, அழகான வெற்றி. ஆனால் இப்பொழுது அதை ரசிக்கும் நிலையில் அவன் இல்லை. ஒவ்வோர் அடி வெடுத்து வைக்கும்போதும் ஏற்படும் தாங்க முடியாத வலியில் அந்த வெற்றி மலிவானதாக இருந்தால் என்ன, ஆயிரம் உயிர்களைக் கொடுத்து வாங்கியதாக இருந்தால் என்ன என்றுதான் நினைக்கத் தோன்றியது. மூச்சிரைக்க, கண்கள் இருண்டு வர, அவன் ஒரு கணம் காரை பெயர்ந்த அந்தக் கட்டிடச் சுவரை





## அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி

### ரூ 1,000 முதல் பரிசு பெறும் சிறுகதை

வலது கையால் பிடித்துக் கொண்டு சற்று நிதானித்துக்கொள்ள முயன்றான்.

இன்னும் சில மணி நேரங்களில் அவனைத் தேடிக் கொண்டு அவனது சக சிப்பாய்கள் நிச்சயம் வருவார்கள். அதன் பின் என்ன கவலை? இதுவே, பத்து வருடங்கள், இல்லை, ஐந்து வருடங்களுக்கு முன்பாக இருந்தால் கூட அவன் எப்படியோ ஊர்ந்து இந்நேரம் ஊருக்குள் சென்றிருப்பான். ஆனால் இப்போது அதற்கான தெம்பு அவனிடம் இருந்ததாக அவனுக்குத் தோன்றவில்லை. இன்னும் ஆறு மாதங்களில் ஓய்வு பெற வேண்டியவன் அவன்... மேலும், வருடங்கள் செல்லச் செல்ல உடல் வலு குன்றுவதைவிட மனசில் அல்லவா உற்சாகம் மங்கிவிடுகிறது? போன வருடம் அவனுடைய மனைவி இறந்து விட்டாள், அதற்கு முன் வருடம் அவனுடைய ஒரே மகன்.... தனிமையின் சித்திரவதையை இன்னும் சில வருடங்கள் அனுபவிக்க வேண்டாம், வேண்டாம் என்று மனமல்லவா கெஞ்சுகிறது?

உலர்ந்து போயிருந்த நாக்கால் அவன் மெள்ளத் தன் உதடுகளை நீவிவிட்டுக் கொண்டான். வியர்வையின் கரிப்பு சுவைத்தது. அவன் மெல்லத் தலையைத் திருப்பி, தான் சாய்ந்து நின்ற அந்தக் கட்டிடத்தைப்பார்வையிட்டான். சற்று நீள் சதுரமாக, நிறைய ஜன்னல்களுடன் ஒரு பள்ளிக்கூடம் போல் தோற்றமளித்தது அது. கூரையை எந்தக் குண்டு வீச்சுக் கொண்டு போயிற்றோ தெரியவில்லை.

'உள்ளேயிருந்த பிள்ளைகள் என்னவாயிருப்பார்களோ?'

ஜன்னல்களில் கம்பிகளோ, கதவுகளோ இல்லை. அவன் நின்றிருந்த இடத்திலிருந்து பத்தடி தள்ளி இடிந்துபோன கதவு வழியிருந்தது. அதை அடைந்து விட்டால் வாயிற்படியில் சாய்ந்தாற்போல் உட்கார்ந்துவிடலாம். பின்பு கடவுள் விட்ட வழி.

அவன் தன் பலத்தைத் திரட்டிக் கொண்டு வாசற்படியை நோக்கி நகர ஆரம்பித்தான்.

எங்கோ ஒரு லாரி புறப்பட்டுச் செல்லும் சத்தம் கேட்டது. அவன் சற்று நின்றான்.





ஒருவேளை அவனைத்தான் தேடி வருகிறார்களோ? ஆனால் அப்படி யொன்றும் நடக்கவில்லை. நிமிடங்கள் தான் நகர்ந்தனவே ஒழிய, அவனைத் தேடி ஒருவரும் வரவில்லை. வேறெங்கோ தொலைவில் துப்பாக்கியின் சத்தம் ஒரே ஒரு முறை தீர்மானமாக ஒலித்து அடங்கியது. அவன் மறுபடியும் வாயிற்படியை நோக்கி நகர ஆரம்பித்தான்.

ஐந்தடி.... நாலடி....

'எப்படி இரைக்கிறது! ஒருவேளை குண்டு என் நுரையீரலுக்குள் புகுந்து விட்டதோ? அதனால்தான் இப்படிச் சுவாசிக்க முடியாமல் சிரமமாயிருக்கிறதோ!'

மூன்றடி.... இரண்டடி.... அப்பாடா! சொல்லி முடியாத களைப்போடு அவன் வாயிற்படியில் உட்காரப் போன சமயம், வாயிற்கதவுக்கு உள்புறமிருந்து நீண்ட இரு கரங்கள் அசாதாரண வெறியோடு அவனை இழுத்து உள்ளே தள்ளின.

ஆச்சரியத்தில் கத்தக்கூட அவனுக்குக் குரல் எழும்பவில்லை. நிலைகுலைந்து உள்ளே போய் விழுந்த அவன் தன் கண்களை வேறிரு ஆத்திரம் மிகுந்த கண்கள் வெறிப்பதை அறிந்தான். நெஞ்சில் கைத்துப்பாக்கியின் முனை அழுந்துவதை உணர்ந்தான். ஒரே ஒரு நிம்மதி. உடலின் உபாதையை வெகு நேரம் தாங்க வேண்டியிராது. ஆனால் முதலில் எழுந்த வியப்பு அடங்குவதற்குள்ளாகவே, அது அவனுள் இரட்டிப்பாகிவிட்டது. காரணம், அந்தத் துப்பாக்கி வெடிக்கவில்லை! அவனருகே சீறிக் கொண்டு வந்த முகம் சட்டென்று தன் ஒளியை இழந்து தொய்ந்தது. அவன் தன்னைச் சுதாரித்துக் கொண்டு அந்த உருவத்தைத் தாங்கிக் கொள்ளு முன், அது மடங்கிக் கீழே சரிந்து விட்டது. கைத்துப்பாக்கி நாராசமான உலோக ஒலியுடன் செங்கல் தரையில் விழுந்தது. அவன் குனிந்து தனக்கு வெகு அருகில் குப்புறக் கிடந்த அந்த உருவத்தைப் பார்த்தான். அவனுடைய நெஞ்சில் இழையும் மூச்சின் ஒலியை விட ஒரு சுருதி மேலாகவே அந்த உருவம் இரைத்து இரைத்துச் சுவாசித்துக் கொண்டிருந்தது. அப்பொழுதுதான் அவன் இன்னொன்றையும் கவனித்தான். வாயிற்படியிலிருந்து தொடங்கித் தரை யெங்கும் திட்டுத் திட்டாக ரத்தம் ஈரமாகப் படிந்திருந்தது. ஒரு கணத்தில் முகமெங்கும் அருவியாக ஓடிவிட்ட வியர்வையைத் துடைத்துக் கொண்ட அவன், மெல்ல அந்த உருவத்தினிடம் சென்று அதைத் தன் வலது கையால் புரட்டினான்.

அவனெதிரே ஓர் இளைஞனின் மிக அழகான முகத்தைக் கண்டான். எதிரிப் படையின் சீருடையைக் கண்டான். பின்னர் அவன் பார்வை நகர்ந்து அவ்விளைஞனின் வயிற்றுப் பக்கம் சென்று, அங்கேயே உறைந்தது. ஒரு கணம் அவனுக்கு அடிவயிற்றிலிருந்து புரட்டிக் கொண்டு வந்தது. இந்தக் காயத்துடனா இவன் தன்னைத் தாக்கினான் என்று வியப்பும் அதே சமயம் எழுந்தது. அடுத்த நிமிடம் களைப்பும் அதிர்ச்சியும் அவனை மயக்கமடையச் செய்தன.

சில நிமிடங்களுக்கெல்லாம் அவனுக்கு மறுபடியும் விழிப்பு வந்து விட்டதாகத் தோன்றியது. ஏனெனில் அவன் கண் விழித்த போது, வெய்யில் இன்னும் முழுக்க மறையவில்லை. மேலே தெரிந்த வானம், ஊதாவும் செம்பொன்னுமாக இருந்தது. அவன் மெல்லத் தனது இடது தோளைத் தொட்டுப் பார்த்துக் கொண்டான். மரத்தது போலிருந்தது. 'எப்படியாவது இந்தச் சட்டையைக் கழற்றி விட்டால், காயம் எப்படிப்பட்டது என்று பார்க்கலாம்.... எப்படிக் கழற்றுவது? தொலைகிறது... உடனே காயத்துக்கு மருந்தா போடப் போகிறேன்?' தாகம் நாக்கை வறட்டியது.

அந்த இளைஞனின் அருகில் தரையில் அவனுடைய தண்ணீர்க் குப்பி விழுந்து கிடந்தது. அவன் எழுந்து சென்று அதை எடுத்தான். கனமாக இருந்தது. மூடியைத் திறந்து ஓர் அசுர தாகத்தோடு அதில் பாதிக்கு மேல் குடித்து முடித்தான். முகவாயிலும் நெஞ்சிலும் வழிந்த தண்ணீரோடு குப்பியை மூடிக் கீழே வைக்கப் போனவன், அந்த இளைஞனின் கண்கள் திறந்திருப்பதையும், அவை அவனை உற்று நோக்குவதையும் கண்டு அப்படியே நின்றான். சில கணங்கள் சென்றும் அக்கண்களின் பார்வை தன்னை விட்டுச் சற்றும் அகலாமல் இருப்பதைக் கண்டு துணுக்குற்றுக் கீழே குனிந்தவுடன், ''நான் இறக்கவில்லை'' என்றான் அந்த இளைஞன், அவனுடைய எண்ணத்தைப் புரிந்து கொண்டவன் போல். அவனுடைய குரல் காற்றைப் போல் இலேசாக இருந்தது.

''இந்தச் சண்டையில் நீயும் நானும்தான் 'காஷுவால்டீஸ்' போலிருக்கிறது!'' என்றான் முதிய வீரன், இலேசாக நகைத்தவாறு.

''என் நண்பன் ஒருவன் இறந்து விட்டான்.... அவனைத் தூக்கிச் சென்றுவிட்டார்கள்... நான் இறக்கவில்லை.... அதனால் சிக்க விரும்பாமல் இங்கு ஒளித்து கொண்டேன்.'' பேசின அசதியில் அவன் கண்களை மூடிக் கொண்டான். சிறிது நேர மௌனத்துக்குப் பிறகு அவனுடைய குரல் மறுபடியும் சன்னமாய் ஒலித்தது:

''என்னை என்ன செய்யப் போகிறாய்?''

அந்தக் கேள்வியில் அந்த நிலையிலும் இலேசான கேலி இருந்தது. கண்கள் சிரித்ததாகக்கூடத் தோன்றியது.

முதியவன் சொன்னான்: ''இந்த நிலையில் உன்னை யார் என்ன செய்ய முடியும்?'' அவன்

# ஆஹா! இதுதான் சௌந்தர்யம்! இயற்கையாகவேயா?

அந்த ரகசியம், இயற்கையாய்ப் பொருந்துவதில் சிறந்த ஸாடின் க்ளோவைச் சரியாய்ப் போட்டுக் கொள்ளும் முறையில் உள்ளது.

**முன்பு: யாருமே அவளை கவனிப்பதில்லை.**
ராதா, கண்ட மேக்கப் புகளைப் போட்டுக் கொண்டு, மிகச் சாதாரணமாய் இருந்தாள். பிறகு தோழி ஒருத்தி, சிறந்த மேக்கப்பைத் தேர்ந்தெடுக்கவும், சரியாய் மேக்கப் செய்து கொள்ளவும், கற்றுக் கொடுத்தாள். அவளுக்கு ஏற்ற நிறம் ஸாடின் க்ளோவில் கிடைத்தது.

**சரியான மேக்கப் முறையைக் கற்கிறாள்**
இரகசியம்: ஸாடின் க்ளோ சிறிதே எடுத்து, புள்ளி புள்ளியாய் முகத்தில் இட்டுக் கொள்ளுங்கள். பிறகு அதை முகத்திலும், கழுத்திலும் நெடுகத் தடவி விடுங்கள். எங்காவது அதிகமாயிருந்தால் ஒத்திச் சமமாக்குங்கள். முகத்தில் பளபளப்பில்லாதிருக்க, பொருத்தமான நிறத்தில் லக்மே முகப் பவுடர் உபயோகியுங்கள். எடுப்பாய் விளங்க, ராதா உபயோகிப்பது க்ளோதான்.



**பின்பு: "ஓ! யார் இந்த ரூப சுந்தரி"!**
ராதாவேதான்! காரணம், ஸாடின் க்ளோ இணைந்து சமமாய்ப் பரவுகிறது. மாசுமறுக்களை மறைத்து விடுகிறது. அழகி ராதா, துருதுறுப்பும், தன்னம்பிக்கையும் பெற்ற, முகக் காந்தியுடன் விளங்குகிறாள்.



# லக்மே
## ஸாடின் க்ளோ லிக்விட் மேக்கப்

இந்தியரின் மேனி நிறத்திற்கு ஏற்ற முறையில் ஏழு நிறங்களில் தயாரிக்கப் பட்டவை.




RADEUS/L-171

கண்கள் இளைஞனின் வயிற்றுப் பக்கம் சென்று பின்பு அவசரமாக அங்கிருந்து அகன்றன. ''மேலும், எனக்கே அடிபட்டிருக்கிறது. இப்படியிருக்க, நீ என்னைக் கொல்ல முயல்வதோ, நான் உன்னைச் சிறைப்படுத்த நினைப்பதோ கோமாளித்தனமானது.... ஒருவேளை, என் படைத் தோழர்கள் என்னைத் தேடி இங்கு வரலாம்... அவர்கள் உன்னைச் சிறைப் பிடிக்கலாம்... அதைப் பற்றி இப்போதென்ன?''

மேலே வானம் சாம்பல்பூத்து விட்டது. கூட்டுக்குத் திரும்பும் பட்சிகள் சப்தித்தன. அவனுக்குத் தனது இடதுபுறம் முழுவதுமே மரத்துப் போய் விட்டாற் போல் கனத்தது. அவன் மறுபடியும் எங்கோ தொலைவில் வெறித்துநோக்கியபடி சொன்னான்: ''அதைப் பற்றி இப்போதென்ன?''

கிராமத்தில் ஊரடங்குவதற்காக சைரன் ஊதுவது கேட்டது. அவன் உள்ளம் நிராசையில் தோய்ந்தது. இனி ரோந்து சுற்றும் சிப்பாய்கள் யாராவது அவர்களைக் கண்டு பிடித்தால்தான் உண்டு. இல்லாவிடில் காலையில்தான் உதவி வரும். அதற்குள் இந்த இளைஞன்...?

அவன் தலையைத் திருப்பி அந்த இளைஞனைப் பார்த்தான். அவனுடைய கண்கள் மூடியிருந்தன. சுவாசம் நிதானமாக இழுபட்டுக் கொண்டிருந்தது. குதறுபட்டுப் போன அந்த உடம்பை வெகு நேரம் தன்னால் பார்த்துக் கொண்டிருக்க முடியும் என்று அவனுக்குத் தோன்றவில்லை. அவன் பார்வை மெல்ல அந்தக் கூடத்தைச் சுற்றி நகர்ந்தது. உடைந்துபோன பெஞ்சுகளும் மேஜைகளும் தாறுமாறாகக் கிடந்தன. பலகை மட்டும் ஒரு மூலையில் கிடந்தது. எட்டாம் வாய்ப்பாடு அதில் வெகு சுத்தமாக எழுதப்பட்டிருந்தது. பலகையைத் தாங்கி நிற்கும் கட்டைகளைக் காணோம். அவனுக்கு எதிரேயிருந்த ஜன்னல் கட்டையில் ஒரு சாக்கு... சாக்கா அது?... ஆமாம், சாக்குத்தான் தொங்கியது. அவன் மெள்ளத் தரையில் ஊர்ந்தவாறே போய் அந்தச் சாக்கை எடுத்து வந்தான். அவனுடைய தேவைக்காகவே யாரோ அதை அங்கே போட்டு வைத்தது போல், கோணி சுத்தமாக இருந்தது. வலது கையால் சாக்கை ஓர் உதறு உதறி விட்டு அதை அந்த இளைஞனின் நெஞ்சு வரையில் போர்த்தி விட்டான்.

அந்த ஸ்பரிசத்தினாலோ என்னவோ, இளைஞன் உடனே விழித்துக் கொண்டு விட்டான். வலியினால் திரை போடப்பட்ட கண்கள் நிலையற்றுச் சுழன்று அவன் மேல் படிந்தன.

''இருக்கிறாயா?'' என்றன உதடுகள்.

முதியவன் தலையை அசைத்து விட்டு இளைஞனின் அருகே குனிந்தான்.

இளைஞன் கேட்டான்: ''நீ உண்மையான உருவம்தானே? பிரமை இல்லையே....?''

''நான் பிரமை இல்லை, தம்பி! மனிதன் தான்... உன் தந்தையைப் போல் ஒருவன்... உன் பெயர் என்ன சொல்?''

''யூஸுஃப்.''

''என் பெயர் கோவிந்த்.'' முதியவன் தன்னைத் தானே அறிமுகப்படுத்திக்கொண்டான்.

''ஏன் எனக்குப் போர்த்தியிருக்கிறாய்? என் காயம் பார்க்க அசிங்கமாக இருக்கிறதா?''

கோவிந்தை அந்தக் கேள்வியின் கூர்மை தாக்கியது.

அவன் சட்டென்று, ''அதில்லை. இன்னும் கொஞ்ச நேரத்தில் குளிரெடுக்க ஆரம்பித்து விடும். அதற்காகப்போர்த்திவிட்டேன்'' என்றான். பிறகு, யூஸுஃபின் அகன்ற விழிகளையும், செதுக்கி எடுத்தாற் போலிருந்த நாசியையும் உதடுகளையும் பார்த்துக் கொண்டே சொன்னான்: ''உண்மையில், நீ எவ்வளவு அழகாக இருக்கிறாய் தெரியுமா? உன் முகத்தைப் பார்த்துக் கொண்டே இருக்கலாம் போலிருக்கிறது. இதை உன் பெற்றோர்களோ, ஏன், உன் காதலியோகூட உன்னிடம் சொல்லக் கூச்சப்பட்டிருப்பார்கள். ஆனால் அதையே நான் சொல்வதில் தவறில்லை. அசிங்கமில்லை. நான் முன்பின் தெரியாதவன், வயோதிகன், உனக்கு எதிரியும்கூட......'' பேசிக் கொண்டே போன கோவிந்த், யூஸுஃப் மறுபடியும் தூங்கிவிட்டதைப் பார்த்து நிறுத்தினான்.

அப்பொழுது நன்கு இருட்டி விட்டது. திறந்த கூரை வழியாக ஓரிரு நட்சத்திரங்கள் கூடத் தெரிந்தன. கோவிந்துக்கு இந்தச் சமயத்தில் வியப்புக்குரிய வகையில், இறந்து போன தன் தாயாரின் நினைவு வந்தது. அவளைப் பற்றி அவன் நினைத்துப் பார்த்தே பல ஆண்டுகள் ஆகி விட்டன. சமீப காலமாக, தனிமையில் இருக்கும்பொழுதோ, அல்லது சில சமயம் குடியினால் ஏற்படும் நெகிழ்ச்சியிலோ கூட, அவனுக்குத் தன் மனைவியும், மகனுமே நினைவுக்கு வருவார்கள். ஆனால் இந்த நேரத்தில் அந்தக் கறுத்த இரவின் ஓரிரு நட்சத்திரங்களைப் பார்க்கும் பொழுது அவனுடைய தாயாரின் நினைவு அவனுக்கு வந்தது. அவள் அழகிய இளம் யுவதியாக, நட்சத்திரங்களின் பேர்களை அவனுக்குச் சொல்லியபடி அமுதூட்டியது ஞாபகத்துக்கு வந்தது. இந்த யூஸுஃபின் அன்னையும் அப்படித்தான் தன் பிள்ளையை வளர்த்திருப்பாள்.... அவள் இன்னும் இளையவளாகவேதான் இருப்பாள்.... இவனுடைய தாயார் என்பதால் அழகியாக இருப்பாள். இவனுக்காக ஐந்து வேளையும் அல்லாவிடம் பிரார்த்தித்துக் கொண்டிருப்பாள். இன்னும் இரண்டு நாட்களிலோ, ஒரு வாரத்திலோ அவளுக்கு இடியைப் போல் ஒரு செய்தி போய்ச் சேரும்....

''தண்ணீர்'' என்றான் யூஸுஃப், முனகியபடி, ''தண்ணீர் வேண்டும்.''

கோவிந்த் தன் கால்சராயின் வலது பைக்குள் கையை விட்டு ஒரு தீப்பெட்டியை எடுத்தான். தீக்குச்சியின் ஒளியில் யூசுப்பின் தண்ணீர்க் குப்பியை எடுத்தவன் கொஞ்சம் தண்ணீரை அதன் மூடியில் சரித்து இளைஞனின் வாயில் வைத்து ஊட்டினான். ஒரு மிடறு தான் உள்ளே சென்றிருக்கும், யூசுப்பின் கை மூடியைக் கீழே தள்ளி விட்டது. தீக்குச்சியும் அணைந்து போயிற்று.

''விளக்குகள் ஏன் அணைந்து விட்டன?'' என்றான் யூஸுஃப், தெளிவில்லாமல். மயக்கமாக ஒலித்தது அவன் குரல்.

''கரண்ட் போய் விட்டது. இன்னும் கொஞ்ச நாழியில் வந்து விடும். நீ தூங்கு'' என்றான் கோவிந்த்.

இதைச் சொன்ன பிறகு 'இப்பொழுதென்ன தமாஷ் வேண்டிக் கிடக்கிறது' என்று தோன்றியது.

தூரத்தில் ஒரு விமானம் வரும் ஓசை கேட்டது. அது அருகே நெருங்கிப் பேரிரைச்சலாக மாறியவுடன், அவன் நிமிர்ந்து பார்த்தான். செங்கல் தரை கிடுகிடுத்தது. பின்னர் விமானம் கடந்து சென்று விட்டது.

''அது உங்களுடையதுதான், எங்களுடையது அல்ல'' என்றான் கோவிந்த்.

யூஸுஃப் ஒன்றும் சொல்லவில்லை.

''கேட்கிறதா? இப்பொழுதுதான் எங்கள் விமானங்களின் சத்தம் கேட்கிறது. உங்கள் ஆள் வகையாக மாட்டிக் கொண்டான் இன்று.'' அவன் பேசி முடிப்பதற்குள் இன்னும் இரண்டு விமானங்களின் ஒலி கேட்டது.

அடுத்த அரை மணி நேரத்துக்கு அவ்விமானங்களின் ஓசையே வானத்தை நிறைத்தது. ஒரே ஒரு முறை பயங்கரமான வெடிப்புச் சத்தம் ஒன்று வெகு தொலைவில் கேட்டது. கோவிந்த் அவசரமாகத் தனக்கு வலது புறமிருந்த ஜன்னல் வழியாகப் பார்த்தான். அடிவானம் ஒரு கணம் வெளிச்சமாகப் பிரகாசித்துவிட்டு, மறுபடியும் இருளில் ஆழ்ந்தது.

''உங்கள் ஆள்தான் 'அவுட்'.'' என்றான் கோவிந்த் உற்சாகமாக. யூஸுஃப் அப்போதும் ஒன்றும் சொல்லாததால் மௌனமானான். எண்ணங்கள் வேறு திசையில் ஓடின.

''இனி காலையில் யாராவது வந்தால்தான் உண்டு.... அத்தனை நேரம் இந்தப் பையன் தாங்க மாட்டான்... நானே தாங்குகிறேனோ என்னவோ? அடேயப்பா! நிமிடத்துக்கொரு விதமாக அல்லவோ இந்த உடல் வலியையும் வேதனையையும் அனுபவிக்கிறது? நான் போனால் பரவாயில்லை. ஆனால் இந்தப் பையனைப் பிழைக்க வைக்க முடிந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்? கோவிந்த் அப்படியே உறங்கிப் போனான். யூஸுஃப்பின் குரல் கேட்டுத்தான் விழித்தான்.

கோவிந்த் நிக்குச்சியைப் பற்றவைத்துப் பார்த்தபோது யூஸுஃப் குளிரினால் தாக்கப்பட்டவன் போல நடுங்கிக் கொண்டிருந்தான். கண்கள் அகலத் திறந்திருந்தன. வாயிலிருந்து விம்மல்கள் வெடித்துச் சிதறிக் கொண்டிருந்தன.

''எனக்குப் பயமாக இருக்கிறது... என் கூட யாராவது வாங்களேன்... எனக்குப் பயமாக இருக்கிறது....அசீஃப்... ஸலீமா.. என்னை விட்டுப் போகாதீர்கள். எனக்குப் பயமாக இருக்கிறது...''

''யூஸுஃப், இதோ பார். நான் இருக்கிறேன். என் பெயர் கோவிந்த்... யூஸுஃப்.''

---

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி

## பரிசு விவரங்கள்

**முதல் பரிசு ... ரூ. 1000/-**

**நீலவானத்தில் வெள்ளை நாரைகள்**
எழுதியவர்: வி. ஜானகி
17, பாண்டிய நகர், திண்டுக்கல்

**இரண்டாம் பரிசு ... ரூ. 500/-**

**"உனக்கானது எனக்கு!"**
எழுதியவர்: சோம. மகாதேவன்
19, முத்து நாயக்கன் தெரு
நுங்கம்பாக்கம், சென்னை-34

**மூன்றும் பரிசுகள்... ரூ. 250/- விதம் இரு கதைகளுக்கு**

**1. அரும்புகள்**
எழுதியவர்: வெ. முரளிநாதன் (அரவிந்தன்)
நிபூ வி - 23, கெமிக்கல் காலனி
மேட்டூர்டாம், சேலம்

**2. செம்பொற்சோதி**
எழுதியவர்: ஜி. எஸ். ராஜரத்தினம்
'ராஜஸியாமளா'
13-A/2, டபிள்யூ. ஈ. ஏ.
கரோல்பாக், புதுதில்லி - 5

தீக்குச்சி பட்டென்று அணைந்து விட்டது. கோவிந்த் அடிக் குரலில் ஏதோ சபித்தான். மறுபடியும் ஓர் உரசல். மங்கிய அலைபாயும் ஒளி. யூஸுஃப்பின் கையைச் சுற்றிக் கோவிந்தின் வலது கை படிந்திருந்தது.

''நான் இங்கேதான் இருக்கிறேன், யூஸுஃப். உனக்கு என்ன செய்கிறது?''

''பயமாக இருக்கிறது ஐயா, பயமாக இருக்கிறது...'' சிறு பையனைப் போல் அவன் அழுதான்.

அவன் கையைப் பிடித்திருந்த கோவிந்தின் கை ஒரு கணம் வேர்த்து விட்டது. ''எதைக் கண்டு பயப்படுகிறாய், யூஸுஃப்? நம்மைச் சுற்றி யார் வந்து பயமுறுத்துகிறார்கள்? யமனின் தூதர்களா? பாவ புண்ணியங்களை அளக்கும் கணக்கர்களா? எந்த நிழல்கள் நம்மை நெருங்குகின்றன யூஸுஃப்?''

கோவிந்த் தன்னை மேலே பார்க்கக் கட்டாயப்படுத்திக் கொண்டான். சிநேகமாகச் சிமிட்டிக் கொண்டிருக்கும் நட்சத்திரங்களைப் பார்த்தவாறே, அவன் யூஸுஃப்பின் கையை உறுதியுடன் பற்றிக் கொண்டு பேசினான்.

''எதற்கும் பயப்படாதே யூஸுஃப். நான் பக்கத்தில் இருக்கிறேன். உன்னை ஒருத்தரும் ஒன்றும் செய்ய மாட்டார்கள். கடவுள் உன் கூடவேதான் இருக்கிறார்... உனக்கு ஒரு கெடுதலும் நேராது...யூஸுஃப்...யூஸுஃப்!''

அவன் மறுபடியும் மயக்கத்தில் ஆழ்ந்து விட்டதாகத்தோன்றியது. கோவிந்த் மெல்லத் தன் கையை அவனுடைய கையிலிருந்து விடுவித்துக் கொண்டான்.

கண்களை மூடிக் கொண்ட கோவிந்த் வேண்டுமென்றே தன் சிந்தனையைச் சுழற்றிப் படர விட்டான். அதென்ன பெயர் சொன்னான் இந்தப் பையன்? ஸலீமாவா? அழகான பெயர்தான். அந்தப் பெண்ணும் அழகாக இருப்பாளோ? ஒல்லியாக, சிவப்பாக, கண்களின் ஓரங்களில் சிரிப்புக் கூத்தாட, என் லட்சுமியைப் போல்... லட்சுமி வண்ண வண்ணமாகப் புடவைகள் கட்டி நெற்றியில் கண்களைக் கூச வைப்பது போல் பொட்டு வைத்துக் கொள்வாள்... இந்தச் சலீமாவுடைய நெற்றியை அவளுடைய குழற் கற்றைகளே அலங்கரிக்கும்... இதென்ன கற்பனை? ஸலீமா இவனுடைய கடைக்குட்டி தங்கையாக இருக்கலாம். காதலிதானென்று என்ன நிச்சயம்? சொல்லப்போனால் இவன் இன்னும் காதல் விவகாரங்களின் அருகேயே இதற்குள் போயிருக்க மாட்டான் என்று தோன்றுகிறது... அவ்வளவு குழந்தைத்தனமாக இருக்கிறது இவன் முகம்... என் லட்சுமியாவது ஒரு குழந்தையைப் பெறும் சாக்கில் இறந்து போனாள்... இவன் வாழ்க்கை என்ன என்பதைத் தெரிந்து கொள்ளாமலேயே போய்விடுவானோ?

எனக்கென்ன அக்கறை? இவன் யார், நான் யார்? எதிரிகள்... முடிந்திருந்தால் ஒருவரையொருவர் கொன்றிருப்போம். இவனைப் போல் எவ்வளவு பிள்ளைகள் என் கைகளாலேயே மடிந்திருக்கிறார்களோ? இவன் எத்தனை பேரைக் கொன்றிருக்கிறானோ?... பச்சாத்தாபம் ஒரு கேடா யிருந்தது இப்போது....

ஆனால் கோவிந்தின் செவிகள் மட்டும் வெளியே, சாலையில் ஏதாவது அரவம் கேட்கிறதா என்பதிலேயே கவனமா யிருந்தது. ஒரு சப்தமும் அவனுக்குக் கேட்கவில்லை. அந்த இரவு விடியவே விடியாதோ என்று எண்ணும்படி நீண்டு கொண்டே போயிற்று.

பட்சிகளின் ஓசை கேட்டுத்தான் எழுந்தான் கோவிந்த். இன்னும் விடியவில்லை. ஆனால் வானத்தின் மை பூசிய கறுப்பு விலகி, இலேசாக ஒளி விடத் தொடங்கி யிருந்தது. கோவிந்துக்குத் தலையிலிருந்து கால்வரை திகுதிகுவென்று பற்றி எரிவது போன்றதோர் உணர்ச்சி ஏற்பட்டது. கையை நெற்றியில் வைத்துப் பார்த்துக் கொண்டான். தகித்தது. அவன் யூஸுஃப் பக்கம் பார்த்தான்.

''ஐயா!'' என்றான் யூஸுஃப் தெளிவாக.

கோவிந்துக்குத் தூக்கி வாரிப் போட்டது. என்ன உடம்பு இது. இப்படிப்பட்ட அடியை இத்தனை நேரம் தாங்குவதற்கு என்று தோன்றியது. ஆசைதான் அந்த உயிரை இழுத்துப் பிடித்திருந்ததா? நெஞ்சில் இலேசாக நம்பிக்கை துளிர்விட, கோவிந்த், ''ஏன், யூஸுஃப்?'' என்றான்.

யூஸுஃப் மேலே வானத்தைப் பார்த்தபடி இருந்தான்.

''ஐயா! பார்த்தீர்களா? எவ்வளவு நாரைகள் மேலே பறக்கின்றன? அழகாக இல்லை?''

கோவிந்த் அண்ணாந்து பார்த்தான். ஆம்பல் பூத்த வானம் வெறுமையாகவே இருந்தது.

யூஸுஃப் மறுபடியும் பேசினான். ''ஊரை விட்டு வந்த பிறகு இன்றுதான் ஐயா நான் இவ்வளவு நாரைகளைப் பார்க்கிறேன்...நான் சிறுவனாக இருந்தபொழுது என் கையிலிருந்தே மீன் வாங்கித் தின்னும் ஒரு நாரை, அவ்வளவு பழகியிருந்தது.... ஐயா! இந்தக் கடற் காற்றுத்தான் எவ்வளவு சுகமாக இருக்கிறது? இந்த மணல்தான் உடலுக்கு எவ்வளவு இதம்! வானம்தான் என்ன நீலமாக இருக்கிறது! ஐயா, பாருங்கள், எவ்வளவு அழகான நாரைகள்? ஸலீமா பார்த்தால் சந்தோஷப்படுவாள்...'' கோவிந்த் வெற்றுக் காகிதம் போலிருந்த வானத்தை இன்னொரு முறை ஒன்றும் புரியாமல் நோக்கி விட்டு, அவன் பக்கம் திரும்புவதற்குள் அவன் இறந்து விட்டிருந்தான். இனிமையான அந்தப் புன்னகை அவன் கண்களையும், உதடுகளையும் விட்டு அகலவேயில்லை.

ஊருக்குள் சைரன் ஊதுவது கேட்டது. வெளியே சாலையில் ஒரு ஜீப் நெருங்கி வரும் சத்தம் கேட்டது. பள்ளிக்கூடத்துக்கு முன்னால் வந்து நின்ற ஜீப்பையும், அதிலிருந்து இறங்கிய தன் தோழர்களையும் கோவிந்த் கதவு வழியாகப் பார்த்தான். அவன் கைகள் நீண்டு யூஸுஃப்பின் கண்களை மென்மையாக அழுத்தி மூடின. பின்னர் அவன் தன் நண்பர்களைச் சந்திக்க ஆயத்தமானான்.

# பொன்னியின் புதல்வர்

அமரர் **கல்கி**யின்

வாழ்க்கை வரலாறு



**சுந்தா**



# முன்னுரை

இந்த வரலாற்றின் நாயகர் பற்பல புனைபெயர்களைத் தமக்குச் சூட்டிக் கொண்டார். அத்துடன், பிறருக்கும் பாராட்டுப் பெயர்களையும் பட்டப் பெயர்களையும் புனைந்து சூட்டினர். ''பொன்னியின் செல்வன்'' என இராஜ ராஜ சோழனுக்கு அவர் சூட்டிய பெயர் சிறப்பானதோர் உதாரணம். இந்தப் பெயரையே சற்று மாற்றி, எத் தனையோ பெயர்களுடன் இன்னும் ஒன்ருகக் கல்கிக்குச் சூட்டி, இந்த வரலாற் றின் மகுடமாகவும் வைத்திருக்கிறேன். பொன்னி நாட்டில் பிறந்து வளர்ந்தவர் என்ற காரணத்தால் இந்தப் பெயர் என்பது, சாதாரணமாய்ச் சொல்லக் கூடிய பொருத்தம். பொன்னியாம் காவேரியின் அருளால் சோழநாடு பெற்ற வளம், அந்த வளத்திலே கொழித்த வனப்பு, அவை இரண்டிஞ லும் செழித்த கலைகள் — இவற்றையெல் லாம் கல்கி அனுபவித்துப் போற்றி எழுத்திலே படைத்தளித்தார் என்பது சிறப்பாகச் சொல்ல வேண்டிய பொருத்தம்.

இந்த வரலாற்றை எழுதுவதற்கு எவ்வித உத்தியைக் கையாண்டுள்ளேன் என்பது, இதைப் படிக்கையில் தாஞ கவே வாசகர்களுக்குப் புலஞகும். ஆயி னும், முன்கூட்டியே சில குறிப்புக்களை மட்டும் சொல்ல வேண்டியது அவசிய மாகிறது.

''அலையோசை'' நாவலைத் தாம் எழுதியதாக எண்ணக்கூடவில்லை என் றும், அதில் வரும் பாத்திரங்களே தத்தம் உணர்ச்சிகளை வெளியிட்டு அதை எழுதினர்கள் போல் தோன்று கிறது என்றும் அதன் முன்னுரையில் கல்கி சொல்லியிருக்கிறர். கூடுவிட்டுக் கூடு பாயும் கலைத் தத்துவத்தை விளக் கும் உபசாரக் கூற்று இது. இப்படி அல்லாமல், உண்மையாகவும், உண்மை யான அடக்கத்துடனும், ''இந்த வர லாற்றை நான் எழுதவில்லை'' என்று நான் சொல்லுகிறேன். கல்கியின் உற வினர்கள், நண்பர்கள், அவரைப் பற்றி ஏற்கனவே கட்டுரை வரைந்துள்ள வர்கள் — இவர்கள் எல்லோரும் சேர்ந்து தான் இதை எழுதி யிருக்கிறர்கள். எல்லாரையும்விட அதிகமாய்க் கல்கியே எழுதி யிருக்கிறர். இவர்கள் சொல்லி யுள்ளதை எல்லாம், பெரும்பாலும் அவரவர் சொற்களிலேயே இணைப் பாய்த் தொகுத்து, இடையிடையே என் குறிப்புக்களையும் கருத்துக்களையும் சேர்த் துக் கொடுத்திருப்பதுதான் நான் செய் துள்ள பணி.

ஐம்பத்தைந்து வயது வரைதான் கல்கி வாழ்ந்தார். எனினும், அதற்கு மிக அதிகமான ஆயுளுக்கு உரியதாய் இருந்தது அவருடைய வாழ்க்கை. ஊக்க மும் வேகமும், சோதனைகளும், சாதனை களும் நிறைந்த அவருடைய வாழ் நாளின் எல்லா விவரங்களையும் சில நூறு பக்கங்களில் அடக்கிக் கொடுக்க இயலாது. ஆகவே, விட்ட குறைகள்



இதில் நிறைய இருக்கத்தான் செய்யும்.

காலப் பிணைப்பை அல்லாமல் கருத்துப் பிணைப்பைக் குறியாகக் கொண்டு இந்த வரலாற்றை அமைத்திருக்கிறேன். நிகழ்ச்சிகளையும், செயல்களையும், அவற்றின் காரணங்களுடனும் பலன்களுடனும் இணைத்து வர்ணித்திருக்கிறேன். இப்படி வர்ணிப்பதற்கு, முன்னிருந்து பின்னும், பின்னிருந்து முன்னும், மையத்திலிருந்து இரு காலமும் நோக்குவது அவசியமாகும். ஒரே நாடகத்தில் வெவ்வேறு பாகங்களை ஏற்கும் ஒரு நடிகரைப் போல் கல்கி வாழ்ந்ததால், அவருடைய விதவித வடிவங்களையும் வண்ணங்களையும், குணக் கூறுகளையும் பண்புகளையும் தக்கபடி பகுத்தோ தொகுத்தோ காட்டுவதற்காக இத்தகைய முறையைக் கையாண்டுள்ளேன். இதன் காரணமாய், அத்தியாயத்துக்கு அத்தியாயமும் சரி, ஓர் அத்தியாயத்தின் உள்ளேயும் சரி — சிலவற்றைத் தவிர — காலத் தொடர்ச்சி இராது. ஒவ்வோர் அத்தியாயத்தையும், அதன் தலைப்பு குறிப்பிடும் பொருளை, 'ஆலாபனை' செய்யும் தனிக் கட்டுரையாகக் கருத வேண்டும்.

இவ்விதமான ''தனிக் கட்டுரைகள்'' சிலவற்றில், ஒரு நிகழ்ச்சி அல்லது அனுபவத்தை, எழுத்தாளர் கல்கி, எப்படி எழுத்திலே ஆண்டார் என்பதைக் காட்டும் நோக்கத்துடன் சில மாதிரிகள் தந்துள்ளேன். அவருடைய படைப்பு மனம், சிந்தனைப் போக்கு, எழுத்து நடை — இவற்றை ஒருங்கே காண்பதற்கு இவை வகை செய்யும்.

யாருடைய வாழ்க்கையையும் ஓரளவுக்குத்தான் நாம் புரிந்து கொள்ள முடியும். இந்த மட்டுப்பாடு பற்றி, கல்கியே, ''பவானி பி.ஏ., பி.எல்.'' என்ற தமது கதையின் முன்னுரையில் எழுதி யிருக்கிறார்:

*சாதாரணமாய் வாழ்க்கையின் வெளிப்படையான நிகழ்ச்சிகள்தாம் நமது கவனத்தைக் கவருகின்றன. நாம் பார்க்கும் வெளி உலகத்துக்குப் பின்னால், மனோலோகம் ஒன்று இருக்கிறது என்பதை மறந்துவிடுகிறோம். ஆற்று வெள்ளத்திலே மேலே மிதந்து வரும் நுரைத் திரள்களும், உதிர்ந்த மலர்களும், குப்பை கூளங்களும் மட்டுமே நம் கண்ணில் படுகின்றன. ஆனால் ஜலப் பரப்பின் அடியில் உள்ள சுழிகளையும் சுழல்களையும் நாம் அறிவதில்லை. தினந்தோறும் நாம் பார்த்துப் பழகி வரும் மனிதர்களைப் பற்றி நமக்கு எல்லாம் தெரியும் என்று நினைக்கிறோம். உண்மையில் அவர்களுடைய வாழ்க்கையின் முக்கியமற்ற, வெளிப்படையான அம்சங்கள்தான் நமக்குத் தெரிவது. அவர்களுடைய உள்ளத்தில் குமுறும் ஆசாபாசங்கள், விரோத வைஷம்யங்கள், இன்ப துன்பங்கள் — இவை ஒன்றும் நமக்குத் தெரியாது.*

நமது வரலாற்றுநாயகரின் வாழ்க்கைக்கும் இது பொருந்தும். ஆனால் அவர், தமது மன உலகத்தை நேர்முகமாயும் மறைமுகமாயும் தமது எழுத்தின் மூலம் ஓரளவு காட்டியிருப்பதால், அந்த அளவுக்கு நாம் அதை நமது கண்ணோட்டத்தின் ஆற்றலைப் பொறுத்துப் புரிந்து கொள்ள முடியும்.



முகப்புப் பக்கத்தில் அமரர் கல்கி தமக்கே உரித்தான பாணியில் அமர்ந்து எழுதுகிறார். அவர் அருகே காணப்படுவது ஓவியர் திரு மணியம் ஆரம்ப காலக் கல்கியில் வரைந்த பொருளடக்கச் சித்திரம். அதில் மேலே கல்கி அவதாரப் படம் இருப்பதைக் கவனியுங்கள்.

எதிர்ப் பக்கத்தில் ராஜராஜ சோழன் எடுப்பித்த தஞ்சை பெரிய கோயிலையும் அடுத்து வரும் பக்கத்தில் கல்கியின் குருநாதர் திரு. வி. க. அவர்களையும் காண்கிறோம்.

# 1. கல்கி என்ற பெயர்

**பெயர் ஒன்றின் பெருமை அதைக் கொண்டோரால் உண்டாவது**

இந்த வரலாற்றின் நாயகரை முதன்முதலாகச் சந்தித்ததைப் பற்றிய விவரத்தை, எஸ். எஸ். வாசன் தமது ஆனந்தவிகடனில் இரண்டு கட்டுரைகளில் தெரிவித்துள்ளார். அவற்றில் ஒரு கட்டுரை 1954ல் கல்கி மறைந்ததை அடுத்து வெளியான அஞ்சலி மலரிலும், மற்றொன்று 1963ல் வந்த கல்கி சிறப்பு மலரிலும் உள்ளன. இரண்டிலும் விவரங்கள் ஒரேவிதமாகவே இருந்த போதிலும், ஒன்றில் இல்லாத தகவல்கள் சில மற்றொன்றில் இருப்பதால், இரண்டையும் இணைத்து இங்கே ஒருங்கே பார்ப்போம் :

"இவர் ஒரு மகா கவி; இவரைப் போன்ற ஒரு கவிஞர் தமிழ் நாட்டில் பிறக்கக் கொடுத்து வைத்தது நாம் செய்த பாக்கியம். இதை மக்கள் இன்று உணராவிட்டாலும் பின் ஒருகாலத்தில் உணருவார்கள்" என்று பாரதியாரின் புத்தகம் ஒன்றுக்குப் பாரதியார் காலத்திலேயே முன்னுரை எழுதியவர் பரலி திரு சு. நெல்லையப்பர். இலக்கியத்தை அவர் எடை போடத் தெரிந்தவர்.

அக்காலத்தில் அவர், "லோகோபகாரி" என்ற பெயரில் ஒரு பத்திரிகை நடத்தி வந்தார். 1928ஆம் வருஷம் ஜூலை மாதம் ஒரு நாள் ஒரு நண்பரைக் கூடவே அழைத்துக் கொண்டு என் இல்லத்துக்குத் திரு நெல்லையப்பர் வந்தார்.

"இவர் 'தேனீ' என்ற புனைபெயரில் 'நவசக்தி' பத்திரிகையில் கட்டுரைகள் எழுதிக் கொண்டிருக்கிறார். உங்களுக்குத் தெரிந்திருக்கும். தங்கள் ஆனந்தவிகடனுக்கும் எழுத வேணும் என்று விரும்புகிறார். கட்டுரை அனுப்பினால் நீங்கள் பிரசுரிக்கிறீர்களா ?" என்று கேட்டுவிட்டு, திரு ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்களை எனக்கு அறிமுகம் செய்து வைத்தார்.

"ஒரு கட்டுரை எழுதி அனுப்பச் சொல்லுங்கள், பார்க்கிறேன்" என்றேன் நான்.

இரண்டே நாட்களில் முதல் கட்டுரை தபாலில் வந்து சேர்ந்தது. அதன் பெயர் "ஏட்டிக்குப் போட்டி!"

"கல்கி" என்ற புனைபெயரை முதன் முதல் அவர் சூட்டிக் கொண்டது இந்தக் கட்டுரையில்தான்.

அந்தக் கட்டுரையே ஏட்டிக்குப் போட்டியாகத்தான் இருந்தது. "எழுத்தில் ஹாஸ்யமே வரக் கூடாது, படிப்பவர்கள்சிரித்துவிட்டால்பாவம், தமிழை வளர்ப்பது ஒன்று தான் பத்திரிகையின் கடமை" என்று கரடுமுரடாகப் பல கட்டுரைகள் வந்து கொண்டிருந்த காலம் அது. அதற்கு முற்றிலும் மாறுபட்டதாக இருந்தது, கல்கியின் ஏட்டிக்குப் போட்டி ! குழந்தைக்கும் புரியக்கூடியதாக இருந்தது அவர் எழுதிய நடை. படிக்கும் போதே சிரிப்பு வந்தது. அடிப்படைக் கருத்தும் ஆழமாக இருந்தது. "ஆகா! இவ்வளவு நன்றாக எழுதுபவர் ஒருவர் இருக்கிறாரே !" என்று நான் ஆனந்தம் அடைந்தேன். கட்டுரையை இரண்டு மூன்று தரம் படித்தேன். என் தாயாருக்கும் படித்துக் காட்டினேன். அவரும் மிகவும் அனுபவித்துச் சிரித்தார்.

வாசனையும் அவருடைய தாயாரையும் மகிழ்வித்த அந்தக் கட்டுரை, "கல்கி எழுதியது" என்ற குறிப்புடன் அடுத்த மாத ஆனந்த விகடனில் வெளியாகி அதன் வாசகர்களை மகிழ்வித்தது. பின்னர் அடுத்தடுத்த இதழ்களில் வெவ்வேறு கதை, கட்டுரைத் தலைப்புக்களின் கீழ் அந்த மூன்றெழுத்துப் புனைபெயர் அடுத்தடுத்துத் தோன்றி வாசகர்களுக்குக் களிப்பும் வியப்பும் ஊட்டிற்று. ஆனந்தவிகடன் மூலம் அந்தப் பெயரும், அந்தப் பெயரின் மூலம் ஆனந்தவிகடனும் விரைவாக, வெகுவாகப் பரவின.

அந்தச் சிறிய புனைபெயரைச் சூட்டிக் கொள்கையில் அது எவ்வளவு பெரிய புகழ்ப் பெயராகத் திகழப் போகிறது என்பதைக் கிருஷ்ணமூர்த்தி உணர்ந்திருக்க முடியாது. அதுவே பதின்மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு தமது சொந்தப் பத்திரிகையின் பெயராக அமையப் போகிறது என்பதையோ நினைத்தே இருக்க முடியாது. ஏற்கனவே அவர் 'நவசக்தி' பத்திரிகையில், அதன் உதவி ஆசிரியர் என்ற பதவியில், "அகஸ்தியர்", "தமிழ்த் தேனீ" என்ற புனைபெயர்களில் எழுதிக் கொண்டிருந்தார். வேறொரு பத்திரிகையில் எழுதுகையில் புதியதொரு புனைபெயர் இருக்கட்டுமே என்றுதான் அவர் கல்கியைத் தோற்றுவித்தார்.



இந்தப் புனைபெயர் அமைந்திட்ட விதம் பற்றி, இப்படி இருக்குமோ அப்படி இருக்குமோ என்பதாக நெடுநாட்களாய்க் குழப்பம் இருந்து வந்தது. அந்தக் குழப்பத்தைக் கல்கியே, 1950ம் ஆண்டில் அவர்



இலங்கையில் பிரயாணம் செய்தபோது தீர்த்து வைத்தார்.

கொழும்பு ஸாஹிராக் கல்லூரித் தமிழ்ச் சங்கத்தின் ஆதரவில், கல்கியை வரவேற்பதற்காக நடந்த கூட்டம் ஒன்றில், அந்தக் கல்லூரியின் தலைமை ஆசிரியர் ஜனாப் அஸீஸ், கல்கி என்ற புனைபெயரில் ஒரு பெரிய ரகசியம் இருக்க வேண்டும் என்றும், அது பற்றிப் பலர் பலவிதமாய் ஊகங்கள் செய்கிறார்கள் என்றும் சொல்லி, அந்த ரகசியத்தைக் கிருஷ்ணமூர்த்தியே உடைத்து வெளியிட வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டார்.

அதற்குப் பதில் அளிக்கையில் கல்கி சொன்னார்: ''என் பெயரைக் கிருஷ்ணமூர்த்தி என்று சொல்லத் தலைவர் ரொம்பவும் கஷ்டப்பட்டார். இது மாதிரிக் கஷ்டம் இருக்கக் கூடாது என்பதற்காகத்தான் என் பெயரைச் சுருக்கமாகக் கல்கி என்று வைத்துக் கொண்டேன். கல்கி என்ற பெயரின் ரகசியத்தை உடைத்துச் சொல்லும்படி ஜனாப் அஸீஸ் கேட்கிறார். ரகசியத்தை ரகசியமாய் வைத்திருக்கும் வரையில் தான் ரகசியம்.''

மழுப்பலான அந்தப் பதிலைச் சொல்லி விட்டு வேறு விஷயங்களைப் பற்றிப் பேசலானார் கல்கி. தலைமை வகித்தவரும் சபையோரும் அதை அப்படியே விட்டு விட்டார்கள். ஆனால், வீரகேசரி பத்திரிகையின் நிருபர் ஒருவர், கூட்டத்துக்குப் பிறகு கல்கியைத் தொடர்ந்து சென்று, கேள்விக்கு மேல் கேள்வி தொடுத்து, அந்த விந்தைப் பெயரின் ரகசியத்தை விண்டுரைக்கச் செய்தார். அந்தப் பேட்டி, 23—8—50 தேதி வீரகேசரியில் வெளியாயிற்று :

''கல்கி என்று ஏன் பெயர் வைத்துக் கொண்டீர்கள்?'' என்று ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியிடம் எமது நிருபர் விசாரித்தபொழுது அவர் பின்வருமாறு சொன்னார்:

'' சில வருஷங்களுக்கு முன்னால் நான் பேசிய ஒரு பொதுக்கூட்டத்தில் தலைமை வகித்த ஒரு தமிழ்ப் பண்டிதர், என்னுடைய பெயரைப் பற்றிப் பிரமாதமாய் ஆராய்ச்சி செய்தது இப்பொழுது என் ஞாபகத்துக்கு வருகிறது. பண்டிதர்கள் என்றாலே தமிழ்ப் பதங்களைப் பற்றி எழுத்து எழுத்தாக ஆராய்ச்சி செய்பவர்கள்தானே! கல்கி என்ற வார்த்தையில் 'கல்' என்றால் கல்யாணசுந்தர முதலியாரிடம் தமிழ்ப் படித்தவன் என்பதாகவோ, அல்லது கல்லிடைக்குறிச்சியில் பிறந்தவன் என்பதற்காகவோ, இதுவும் இல்லாவிட்டால் என் மனைவியின் பெயர் கல்யாணி என்பதனாலோ இருக்க வேண்டும் என்று ஒரு குட்டிப் பிரசங்கம் செய்தார். அவருக்குப் பதில் சொல்லிய பொழுது, 'இந்த வியாக்கியானங்கள் எல்லாவற்றையும்விட, இவற்றை வெளியிட்ட பண்டிதரின் தலையில் கல்லைப் போட்டு உடைப்பவனாகவும் இருக்கலாம் கல்கி என்பவன்' என்றேன்.

''உண்மையில் என் மனைவியின் பெயர் கல்யாணி அல்ல. இனிமேலும் அவள் பெயரைக் கல்யாணி என்று மாற்றிக் கொள்ளச் சொல்லப் போவதுமில்லை. நான் கல்கி என்ற புனைபெயரில் முதன் முதலாக எழுதிய கட்



டுரையைப் படித்தவர்களுக்கு இந்தப் புனைபெயரின் அர்த்தம் புரியும். நான் பழைமையான சம்பிரதாயங்களையும் அர்த்தமற்ற பழக்க வழக்கங்களையும் விட்டொழித்துப் புதுமை யுகத்தை மலரச் செய்ய வேண்டும் என்ற கருத்தை அந்தக் கட்டுரையில் வெளியிட்டேன். இதுவரை கழிந்து போன யுகங்களைத் தவிர்த்துப் புதிய யுகத்தைச் சிருஷ்டிக்கப் போவதாக ஒவ்வோர் இளம் எழுத்தாளரும் எண்ணிக்கொண்டு எழுதுவது இயற்கை. அது போலவே நானும் அந்தக் காலத்தில் ஒரு புது யுகத்தைச் சிருஷ்டிக்கப் போகும் பெரு வீரனாக என்னை நினைத்துக் கொண்டு, பகவானின் பத்தாவது அவதாரமும், புது யுகத்தைக் குறிப்பதுமான கல்கியென்ற புனைபெயரை அப்பொழுது வைத்துக் கொண்டேன்.

''நம் பழங்கால மன்னர்கள் என்ன செய்தாலும் ஜோஸ்யர்களைக் கலக்காமல் செய்வதில்லை. அவர்கள் தொட்டதற்கெல்லாம் ஜோஸ்யம் பார்த்துக் கிரகங்கள் கூறுகிறவாறு நடத்திய அவர்களுடைய சாம்ராஜ்யங்கள் நிலைக்கவில்லை. இருந்த இடம் தெரியாமல் மறைந்து போய் விட்டன. கொலம்பகம், வாஸ்கோடிகாமாவும், ராபர்ட் கிளைவும் ஜோஸ்யம் பார்த்துக் கொண்டா தங்கள் தாய்நாட்டிலிருந்து புறப்பட்டார்கள்? ஜோஸ்யம் பார்ப்பது, சகுனம் பார்ப்பது

முதலான பல அர்த்தமற்ற வழக்கங்களை விட்டொழிக்க வேண்டும் என்று, 'கல்கி' என்ற புனைபெயருடன் எழுதிய எனது முதலாவது கட்டுரையில் நான் குறிப்பிட்டிருக்கிறேன். புதிய கருத்துக்களை வெளியிட்டு வாசகர்கள் மனத்தைப் புதிய திசையில் திருப்பி, புதிய யுகத்தைச் சிருஷ்டிக்க வேண்டும் என்ற ஒரே எண்ணத்துடன்தான் 'கல்கி' என்ற புனைபெயர் பூண்டேனே தவிர, இதற்கு வேறு எந்தவிதமான காரணமும் கிடையாது.

இலங்கைப் பத்திரிகையில் வெளிவந்த இந்த விளக்கம் இந்தியாவில் பரவவில்லை. இங்கே பலரும், ''கல்கி''யுடன் கல்கிடைக்குறிச்சியைச் சம்பந்தப்படுத்தாவிட்டாலும், கல்யாணசுந்தர முதலியாரையோ கல்யாணியையோ சம்பந்தப்படுத்தியேதான் எண்ணி வந்தார்கள். இன்னமும் பலர் அப்படியேதான் எண்ணிக் கொண்டிருக்கிறார்கள்.

கல்கி அவதாரத்தை மனத்தில் கொண்டேதான் இந்தப் புனைபெயரைக் கிருஷ்ணமூர்த்தி வைத்துக் கொண்டார் என்பதற்கு வேறு சில சான்றுகளும் இருக்கின்றன.

கல்கி பத்திரிகையின் மலர் 1 இதழ் 14ன் பொருளடக்கப் பக்கம் புதியதொரு சித்திர அலங்காரத்துடன் வெளிவந்தது. அதன் மேல் பாகத்தில் கலிக்காவதாரியின் உருவம், பாயும் புரவி மீது போர்க் கோலத்தில் வீற்றிருக்கும் பாவனையில் வரையப்பட்டிருந்தது. பத்திரிகையின் கல்கி என்ற பெயருக்குப் பொருத்தமாய் இருக்கட்டும் என்றே அந்த அவதாரச் சித்திரத்தை ஓவியர் மணியத்தைக் கொண்டு ஆசிரியர் வரையச் செய்திருக்க வேண்டும். அந்த அவதாரப் போர் வீரன் மலர் 2 இதழ் 14 வரை பாய்ச்சல் போட்டுக் கொண்டிருந்தான்.

பின்னர், 1943 மத்தியில், திரைப்பட நீளக் கட்டுப்பாடு சம்பந்தமாய், கல்கி ஆசிரியருக்கும் வாசனுக்கும் இடையே ஒரு விவாதம் மூண்ட போது, சுதேசமித்திரன் ஆசிரியர் ஸி. ஆர். ஸ்ரீநிவாசன் அதில் குறுக்கிட்டு வாசன் கட்சிக்கு ஆதரவாக எழுதுகையில், ''இது கலிகாலம்; கல்கி அவதாரம் எடுத்திருக்கிறார்'' என்று கேலி செய்தார். அதற்குக் கல்கியும் கேலியாகவே பதில் அளிக்கையில் எழுதினார்: ''கலியுகத்தில் கண்கண்ட தெய்வமான ஸ்ரீநிவாசப் பெருமானே மலையிலிருந்து இறங்கி வந்து உலக சம்ரக்ஷணார்த்தம் சுதேசமித்திரன் பத்திரிகையை நடத்தி வரும்போது, பவிஷ்யத் புராணத்தில் சொல்லியிருக்கும் காலத்துக்குச் சற்று முன்னாலேயே கல்கி அவசரப்பட்டு அவதாரம் எடுத்துவிட்டால் ஆச்சரியப்படுவதற்கில்லை. நான் அந்தப் பத்தாவது அவதாரத்தின் பெயரை முன்கூட்டியே வைத்துக் கொண்டதிலும் வியப்படைவதற்கில்லை.''

கல்கி அவதாரம் பற்றி இந்த நூலின் ஆசிரியன் கலைக்களஞ்சியத்தில் தெளிவான இந்தக் குறிப்பைக் கண்டான்:

கற்கி (கல்கி) திருமாலின் பத்து அவதாரங்களில் இறுதியானது. இது இனி நிகழும் என்று கூறுகின்றனர். 'தாமோதரனைக் கற்கியும் ஆனான் தன்னை' என்று பெரிய திருமொழி கூறுகிறது. திருமால் கலியுக முடிவில் சம்பள கிராமத்தில் விஷ்ணுயசஸ் என்னும் பிராமணருக்கும் அவர் மனைவி சுமதிக்கும் நாராயண அமிசமாகப் பிறந்து உயர்ந்த குதிரை மீதேறி நீண்ட வாளினால் மூன்றிரவுக்குள் மிலேச்சர் அனைவரையும் வெட்டிக் குவிப்பார் என்பர்.

இந்தச் சுருக்கமான வர்ணனை ''ஸ்ரீ கல்கி புராணம்'' என்னும் நூலின் கடைசிப் பகுதியிலிருந்து கிடைத்தது: ''நீர்கொண்ட மேகம் போல் திருமேனி உள்ளவர்; காற்றுப் போல் குதிரைவாகனமுள்ளவர். கையில் கத்தி ஏந்தியவர்; சர்வ லோகங்களையும் காப்பவர்; கலி எனும் வனத்தைஅழிப்பவர்; சத்திய தர்மங்களை ஆதரிப்பவர்.''

கிருஷ்ணமூர்த்தி சிறுவனாய்க் கிராமத்தில் இருந்த போது நிறையப் புராணக் கதைகள் கேட்டதுண்டு. அந்தக் கதைகளில் அவர் கற்பனைக் கண்ணால் கண்டவர்களில், நீண்ட வாள் ஏந்தி உயர்ந்த குதிரை மீதேறிப் போர் புரியும் வீரரின் தோற்றமும் பெயரும், அந்தப் பெயரின் ஓசை நயமும் அவருடைய மனத்தில் ஆழமாய்ப் பதிந்திருக்க வேண்டும். அதுவே அவரைப் பின்னர் அந்த விசித்திரமான புனைபெயரைப் பூணச் செய்திருக்க வேண்டும்.

புராணக் கல்கிதான் கிருஷ்ணமூர்த்தியின் புனைபெயருக்கு ஆதாரம் என்று இவ்வளவு தீர்மானமாய்ச் சொன்ன பிறகு, இந்தத் தீர்மானத்தைக் குலைக்கும்படியான தகவலையும் சொல்லவேண்டியதாகிறது. சொல்லாவிட்டால் உண்மையை மறைப்பதாகும். அது கருதிக் கேடாக இருக்கும் என்றாலும் சொல்வதே கடமை.

1966ல் வெளியான கல்கி பத்திரிகையின் வெள்ளிவிழா மலரில், கவி சுத்தா

ணந்த பாரதியாரின் குறிப்பு ஒன்று வெளியாயிற்று:

''கல்கி'' என்றால் நமக்குப் பத்தாவது அவதாரம் நினைவுக்கு வருகிறது. நான் 'சுயராஜ்யா' ஆசிரியராய் இருந்தபோது, 'நவசக்தி'யில் துணை ஆசிரியராயிருந்த ரா. கிருஷ்ணமூர்த்தியை, ''எப்போது கல்கி அவதாரம் வந்தது?'' என்று வினவினேன். அருகே திரு வி. க. இருந்தார். கல்கி நாணப் புன்னகையுடன், ''அவதாரம் ஒன்றுமில்லை; அவர் என் பேனாவுக்கு ஆதாரம்'' என்றார், திரு வி. க.வைச் சுட்டிக்காட்டி. ''என்னையும் அவருடன் இணைத்துக் கொண்டார்'' என்றார் கல்யாண சுந்தரர் ....''

இந்தக் குறிப்பு, ''கல்'' என்பது கல்யாணசுந்தர முதலியாரையே குறிப்பிடுவதாகும் என்ற கூற்றை வலுப்படுத்துவதாய் இருக்கிறது. ஆனால் இதை மறுப்பதற்குத் தக்க அமைதி கூற முடியும். கல்யாணசுந்தரரின் முன்னிலையில் சுத்தானந்த பாரதியார் கல்கியுடன் அந்தப் புதிய புனைபெயர் பற்றிப் பேசியதால், தமது குருவுக்குப் பெருமை அளிப்பதாய் இருக்கட்டுமே என்று, ''அவர் என் பேனாவுக்கு ஆதாரம்'' என்று அவர் சமயோசிதமாகச் சொல்லி இருக்கலாம்.

இந்தச் சமாதானத்தை ஏற்க விரும்பாதவர்கள் கல்கி என்ற பெயரில் மர்மம் இருப்பதாகவே வைத்துக் கொள்ளலாம். பல கதைகளில் மர்மத்தைப் பொதிந்து வைத்த கல்கி, தமது புனைபெயரிலும் அதைப் பொதிந்து வைத்தார் எனக் கொள்ளலாம்.

கல்கியின் முதல் கட்டுரை வெளியாகிச் சில மாதங்கள் ஆன பிறகு, ''என் பெயர்'' என்ற தலைப்புடன் அவருடைய கட்டுரை ஒன்று ஆனந்த விகடனில் வெளியாயிற்று :

சில நாளைக்குமுன் ஒரு நண்பர் என்னிடம் பலமாகச் சண்டை பிடித்தார். நான் புனைபெயர் வைத்துக் கொண்டு பத்திரிகைகளுக்கு எழுதுவதுதான் அவருடைய கோபத்துக்குக் காரணம். ''ஏன் சொந்தப் பெயர் போட்டுக் கொண்டு எழுதக் கூடாது ? சொந்தப் பெயர் சொல்லிக் கொள்ள வெட்கமாய் இருக்கிறதா?'' என்று அவர் கேட்டார். உண்மை என்னவென்றால், அவருக்கு ஒரு பிரமை. என்னுடைய கதைகள் முதலியவற்றினால் எனக்கு வரவேண்டிய கீர்த்தி (!) அவ்வளவும் என்னைச் சேராமல் அநியாயமாய்க் கொள்ளை போய்விடுகிறதென்பது அவருடைய கவலை.

பெயர் போட்டுக் கொள்ளாததற்குக் கோழைத்தனம் காரணமல்லவென்று நான் சொல்ல வேண்டியதில்லை. அப்படி வெட்கப் படும்படியான சங்கதி ஏதேனும் நான் எழுதுகிறேனா என்ன? ஒன்றுமில்லை. பின்னர் புனைபெயர் ஏன்? உலகத்தின் மனப்போக்குத் தான் அதற்குக் காரணம்.....

ஒரு சிலருக்குப் பெயர் போட்டுக் கொள்வதில் உண்மையிலேயே அனுகூலம் உண்டு. சாதாரணமாக திரு. வி. கல்யாணசுந்தர முதலியார், ஈ.வே. ராமசாமி நாயக்கர், டாக்டர் வரதராஜுலு நாயுடு, சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் — இவர்களைச் சொல்லலாம். இவர்கள் என்ன எழுதினாலும் படிப்பதற்குத் தனித்தனியே ஒரு கூட்டத்தார் இருக்கிறார்கள். ஆனால் என்போன்ற சாமானியர்களுக்கோவென்றால்....?

என் குட்டை நானே ஏன் உடைத்துக் கொள்ள வேண்டும்? உண்மையில் புனைபெயர் வைத்துக் கொள்வதில் உள்ள அனுகூலம் இதுதான். பெயரைப் போட்டுக் கொண்டால் நான் சாமானியனாகிவிடுகிறேன். ஆனால் ''கல்கி'' எவ்வளவு பெரிய மனிதராய்த்தான் இருக்கக் கூடாது? மகா வித்துவானாக இருக்கலாம்; பண்டித சிரோமணியாயிருக்கலாம்; ஹைகோர்ட் ஜட்ஜாயிருக்கலாம்; மந்திரியாகக்கூட இருக்கலாம் ; காங்கிரஸ் தலைவராயிருக்கலாம் ; சுயமரியாதை வீரராயிருக்கலாம்; இன்னும் எவ்வளவோ பெரிய பெரிய மனிதராக இருக்கலாம். இவ்வளவு மகோந்நதமான பதவியை நான் ஏன் விட வேண்டும் ?

(ஏட்டிக்குப் போட்டி . கட்டுரைத் தொகுப்பு)



''பேஷ்! புது பாட புத்தகமெல்லாம் வாங்கிட்டியா? கொண்டா, அடையாளம் பண்ணித் தர்றேன்.''

இப்படித் தம்மைப் பற்றி முப்பதாவது வயதில் சொல்லிக் கொண்டவர், வெகு வேகமாய் 'சாமானியர்' நிலையிலிருந்து உயர்ந்து, ''மகோந்நதமான பதவி'' அடைந்திட்டார். அவருடைய புனைபெயர் இயற்பெயருக்குப் புகழ் ஊட்டியதால், கல்கி கிருஷ்ணமூர்த்தி யானார். பிறகு கல்கி — ஆசிரியர் கல்கி யானார். பேராசிரியர் கல்கியுமானார்.

(தொடரும்)

# மலர்களிலே அவள் மல்லிகை!




மலர்களின் ராணி, மல்லிகை! இளமைப் பூங்காவில் பூரிப்புடன் பூத்துக் குலுங்கும் இந்த இளமங்கை, அழகு ராணியாகத் திகழ்கிறாள். அந்த புத்தெழில் என்றுமே நிலைத்திட அவள் ஜெய் அழகு சாதன சோப் உபயோகிக்கிறாள். மல்லிகை மணம் வீசும் ஜெய் சோப் மேனியை மிருதுவாக்கி, பொன்னொளி வீசச் செய்கிறது.

மல்லிகை
மணம் கமழும்

**ஜெய்**

அழகுசாதன
சோப்

டாடா தயாரிப்பு

OBM.7002 TM

# மீண்டும் வருக!

பி. வி. ஆர்.




கார் மெதுவாகப் போய்க் கொண்டிருந்தது. மாலை நேரம். மலைக் காற்று சுகமாக இருந்தது.

நெடுஞ்சாலையில் திடீரென்று ஒரு பெரிய மரப் பலகை கண்ணில் பட்டது. பெரிய பெரிய கொட்டை எழுத்துக்களில் ''சின்னப்பட்டி உங்களை வரவேற்கிறது'' என்று எழுதியிருந்தது.

பலகையைக் கடந்தோம். நாம் சின்னப்பட்டி என்ற ஊரில் இருக்கிற உணர்வு பிறந்தது. மலைக் காற்றின் சுகத்துக்கு ஒப்ப, வரவேற்பின் மகிழ்ச்சியும் நிறைவைக் கொடுத்தது.

இந்த நிறைவு இரண்டே நிமிடங்களில் மறைந்தது. பத்துப்பதினைந்து குடிசைகள். அவைகளில் ஒன்று 'தண்ணீர்ப் பந்தல்'! கலயத்தை வைத்துக் கொண்டு, மனிதர்கள் மானம் வெட்கம் ஏதுமில்லாமல் மெய்மறந்து கொண்டிருந்தார்கள். இந்தப் பிரஜைகளைக் கொண்ட சமூகம் நம்மை வரவேற்கிறது!

குடிசையைத் தாண்டினோம். ஒரு குட்டை. நான்கைந்து எருமைகளின் ஜலக்கிரீடை இன்னும் நடந்து கொண்டிருந்தது. ஓரிரு சிறுவர்கள் 'எருமை க்ரீடை' செய்துகொண்டிருந்தார்கள். அவர்களுடைய தலையில் முண்டாக இருந்தது. ஆனால் உடலில் ஏதும் இல்லை.

குட்டையிலிருந்து பெண்களும் கிழவிகளும் தண்ணீர் எடுத்துக் கொண்டு போனார்கள். தண்ணீர் எடுக்க வந்து கொண்டிருந்தார்கள். குட்டையின் இன்னொரு விளிம்பில் இரண்டு மூன்று பேர் குளிக்க, நாலைந்து பேர் துணி துவைத்துக் கொண்டிருந்தார்கள்.

குட்டையைக் கடந்ததும் ஒரு பொட்டைக் காடு.

அங்கே கண்ட காட்சியில் என் உடல் குன்றிப் போய் விட்டது. வயிற்றை அள்ளியது.

இரண்டு மூங்கில் கொம்புகளை நட்டு, அதன் நடுவே ஒரு பன்றியைத் தொங்கவிட்டிருந்தார்கள். வாயில் ஒரு நீண்ட மூங்கிலை நுழைத்திருந்தார்கள். நான்கு கால்களையும் நன்றாகக் கட்டியிருந்ததால் பன்றியால் வலியின் உபாதையைத் தெரிவிக்க உதறவும் முடியவில்லை. அது அணு அணுவாகச் செத்துக்கொண்டிருந்தது. இல்லை, அதை அணு அணுவாகச் சாக அடித்துக் கொண்டிருந்தனர்.

இந்தக் கன்றாவியிலிருந்து விடுபடுவதற்காகச் சாலையின் இடது புறமாகத் திரும்பினேன். சேரி வாழ் மக்களின் அவலம் கண்ணில் அறைந்தது. ஆடை இல்லாத சிறுவர்கள், சிறுமிகள், ஒழுகுகிற மூக்கும் பரட்டைத் தலையுமாய் எங்கள் காரை வேடிக்கை பார்த்துக் கொண்டு நின்றார்கள். ஒரு முப்பது வயதுக்காரியின் இடுப்பில் இருந்த ஒன்று மார்பைக் கவ்வ அழுதது. காலடியில் ஒன்று தவழ, புடவை முந்தானையை இன்னொன்று இழுத்துக் கொண்டிருந்தது. என்றால் இரண்டாம் தடவை அந்தப் பெண்ணைப் பார்க்காமல் இருக்க முடியவில்லை. பார்த்த போது முக்கோணம்தான் நினைவுக்கு வந்தது. அவளுடைய தாய்மை பிதுங்கும் வயிற்றில் நான் சிரிப்பைக் கண்டேன். சோகச் சிரிப்பு. இறைவன் அங்கேயும் இருக்கிறானோ? பகுத்தறிவாளர்களுக்குத்தான் தெரியும்.



சின்னப்பட்டி எல்லையில் இன்னொரு பெரிய மரப் பலகை. அதே கொட்டை எழுத்துக்கள்.

''வருகைக்கு நன்றி.
மீண்டும் வருக!''







# பழங்காலப் பாட்னாவும்

## நகர் வலம்



"எங்கே இவ்வளவு நாரம்?''

அடுத்த தெருவிலிருந்து வருபவரைக்கூடக் கேட்கும் கேள்விதான் இது. ஆனால் தமிழ் நாட்டின் தலைநகரிலிருந்து புறப்பட்டு, ஆந்திரா, ஒரிஸ்ஸா, வங்காளம் ஆகிய ராஜ்யங்களைத் தாண்டிக் கொண்டு, பிஹார் ராஜ்யத்தின் தலைநகரான பாட்னாவை வந்தடைந்த போது என்னிடம் கேட்கப்பட்ட கேள்வி இது.

''பாட்னாவைச் சுற்றிப் பார்க்க வந்திருக்கிறேன்!'' என்றேன்.

''இந்தச் சமயத்திலா?'' - இது ஒருவர் கேள்வி.

'' சரியான சமயத்தில்தான் வந்திருக்கிறார் !'' வேறு ஒருவர் பதில்.

''நேற்றே வந்திருக்க வேண்டும். மாணவர்கள் ஊர்வலத்தையும், பந்த் — கடை அடைப்பையும் பார்த்திருக்கலாம்!'' என்றார் இன்னொருவர்.

நான் பாட்னாவில் இறங்கியபொழுது மழை பெய்து ஓய்ந்திருந்தது. சாலையெங்கும் சகதியும் தண்ணீரும் சொல்லி முடியாது.

''மழைக் காலத்தில் வந்திருக்கிறீர்கள். நானே நகரத்துக்குள் போய்ப் பாருங்கள் ! நகரத்தில் உள்ள 'ர'வை இடம் மாற்றிப் போட்டுவிடுவீர்கள்! நகரம் நரகமாகக் காட்சி தரும்!'' என்று விளக்கினார் மற்றுமொருவர்.

இவர்கள் இப்படி வர்ணித்த பிஹாரின் தலைநகரத்தைப் பற்றிய புராண — வரலாறுகளைப் பார்த்தால் புல்லரிக்கும். பாடலிபுத்திரம் என்ற பெயரில் அசோக மன்னனது ராஜதானியாக விளங்கிய நகரம், அதற்கு முந்தி சந்திரகுப்த மௌரியனின் ஆட்சி பீடம். அதற்குப் பின்னரோ ஷேர்ஷாவின் செங்கோலுக்குப் பெருமை தந்தது. பௌத்தத்தின் பிறப்பிடம். ஜைனத்தின் சிறப் பீடம். சீக்கிய குரு குரு கோவிந்தசிம்மர் — பிறந்து வளர்ந்து புகழ்பெற்ற இடம். இத்தனை பெருமைகளையும் ஒருங்கே கொண்ட பாட்னா நகரத்தை ஒரு முறை வலம் வந்தபொழுது படு ஏமாற்றமே மிஞ்சியது.

ஒரு நகரத்தின் முன்னேற்றம் — பின்னேற்றத்தைத் தெரிந்துகொள்ள அதன் சாலைகள், மருத்துவ மனைகள், சிறைச்சாலைகள் மூன்றைப் பார்த்தாலே போதும் என்று ஸ்ரீ ஜயப்பிரகாஷ் நாராயணன் சொல்வது உண்டு. பாட்னாவில் இறங்கியதும் வரவேற்கும் சிறைச்சாலை தன் பின்னேற்றத்துக்கு முகமன் கூறுகிறது; சாலை தன் உருவத்தைக் காட்டிப் பல் இளிக்கிறது. சிறந்த மருத்துவர்களைக் கொண்ட மருத்துவ மனைகள் தங்கள் வசதிக் குறைவைக் கூறாமல் கூறிச் சிந்திக்க வைக்கின்றன.

அரசாங்கம் சம்பந்தப்பட்ட மிகச் சில இடங்களைத் தவிர மற்ற இடங்கள் — புதிதாக உருவான காலனிகள் உள்பட நகர நிர்மாண முறையில் நல்லபடி உருவாகவில்லை. சென்னை நகரில், நகரமன்றத்தின் அனுமதியின்றி உருவாகியுள்ள சில தெருக்களையே நினைவூட்டின. மக்கள் பெருத்துவிட்ட நகரங்களின் அத்தியாவசியத் தேவையான சாலைகள், சாக்கடைகள் சரியில்லையென்றால் நண்பர் கூறியது போல 'ர'வை மாற்றிப் போடத்தானே தோன்றும்? அதுவும் இந்த மழைக்காலத்தில்?

புனிதமான கங்கைக் கரையில் ஏறக்குறைய ஏழு மைல் நீளத்துக்கு, பதினொரு மைல் சுற்றளவுக்கு உருவாகியுள்ளது இந்த நகரம். கங்கைக்கு அக்கரையில் ஸோனபூர் மேளா என்ற சந்தை நவம்பர் மாதத்தில் கூடுமாம். அங்கே ஆடு மாடு மட்டுமின்றிக் குதிரை யானைகூட விற்பனைக்கு வருமாம்! பாட்னா

வின் கும்ஹரார் பகுதியில் மௌரிய சாம்ராஜ்யத்தின் அரண்மனை அஸ்திவாரத்தின் இலமான பகுதிகளைக் காணலாம்.

அகம் குவான் என்றால் என்ன, தெரியுமா? பெரிய கிணறு. நம் தமிழ் நாட்டுத் தூரவுகளை நினைவுபடுத்துகிறது. அசோக மன்னன் புத்தி தெளிந்து பௌத்த மதத்தைக் கடைப்பிடிப்பதற்கு முன்பு, தனது ஆட்சிக்குப் பங்கம் விளையக் கூடாதே என்பதற்காகத் தன் உறவினர்களில் பலரை இக்கிணற்றில் தள்ளி மாய்த்திருக்கிறானாம். இந்தக் கிணற்றில் விழுந்தவர்கள் தப்ப முடியவில்லையாம். அதனால்தான் இந்தக் கிணற்றுக்கு அகம் குவான் தப்ப முடியாத — கடக்க முடியாத கிணறு என்று பெயர் வந்ததாம்.

இதனையொட்டி 'சீதலா மந்திர்' என்று மாரியம்மன் கோயில் இருக்கிறது. இங்கு வழிபட வருகிறவர்களின் எண்ணிக்கையைக் காட்டிலும் குளவியை விடப் பெரிதான ஈக்களின் எண்ணிக்கையே அதிகமாயிருக்கிறது. வழிபட வருகிறவர்களின் சௌகரியத்தை உத்தேசித்து இங்கு ஏற்பட்டிருக்கும் பணியாரக் கடைகளின் அழையா விருந்தினர்கள் இந்த ஈக்கள்! நோய்நொடிகள் பரவாதிருக்க வேண்டுமென்றால் நகராண்மைக் கழகத்தின் கண் திறக்க வேண்டும். அது திறக்கும் வரையில் சீதளாதேவிதான் அருள் பாலிக்க வேண்டும்.

கோல்கர் என்பது ஒரு வட்ட வீடு. பதினெட்டாம் நூற்றாண்டில் பஞ்சம் வந்த பொழுது ஆங்கிலேயரால் இந்தத் தானியக் கிடங்கு கட்டப்பட்டது. உச்சிப் பிள்ளையார் கோவிலின் உச்சியில் ஏறித் திருச்சி நகரத்தைப் பார்ப்பது போலப் பாட்னா நகரத்தையும் பார்க்க இதன் வட்டப் படிக்கட்டுகள் வழி செய்கின்றன.

பாபு ராஜேந்திர பிரசாதின் சதாகத் ஆசிரமம், பிரபாவதி தேவியின் மஹிலா சர்க்கா சமிதி ஆகியவை காந்தியத்தின் சின்னங்கள்.

அதிகப் புழக்கத்திலுள்ள வாகன வசதி சைக்கிள் ரிக்ஷா. பல இடங்களில் போக்குவரத்து விதிகள் அமுலில் இருப்பதாகவே தெரியவில்லை. ரிக்ஷாக்காரர்கள் வைத்தது தான் சட்டம். ஆனால் ரிக்ஷாக்காரர்கள் பெரும்பாலும் மரியாதையாக நடந்துகொள்கிறார்கள், சென்னையைப் போல் அல்லாமல். சென்னையில் ஆட்டோ ரிக்ஷாக்கள் மூக்கு நுழைய இடம் கொடுத்துவிட்டால், புகுந்து விடுமே! அந்தக் கலையை இவர்களும் நன்கு பயின்றிருக்கிறார்கள். டம்டம் என்று கூறப்படும் ரேக்ளா வண்டி, டாக்ஸி என்று கூறப்படும் ஆட்டோ ரிக்ஷாக்கள் இவற்றில் எத்தனை பேர் ஏறிக் கொள்ள முடியுமோ, அத்தனை பேர் ஏறிக் கொள்ளலாம். சென்னை பஸ்களில் பயணிகள் தொங்கிக் கொண்டு போகிறார்கள் என்றால், இங்கு பஸ்களின் கூரை மீது ஏறிக் கொண்டு போகிறார்கள்! அந்த அளவுக்குப் பஸ் வசதிக் குறைவு!

## நிகழ்கால அரசியலும்!

எதிர் பக்கத்தில் :

- குரு கோவிந்த சிங் பிறந்த இடம் ஹரி மந்திர்.
- கோல்கர்-தானியக் கிடங்கு.
- ஷாஹீத் பூங்கா.

இந்தப் பக்கத்தில் :

- நாடு போய்க் கொண்டிருக்கும் நிலை கண்டு ஆத்திரத்துடன் போராட்டம் மேற்கொண்டுள்ள ஜே.பி.
- போலீஸாரும் சத்யாக்ரகிகளும்.
- ஜூலை 12 சட்ட மன்றத்தில் கைது செய்யும் பொழுது சத்யாகிரகிகளின் ஆவேசம்.








'' பெண் பார்க்க வரச் சொன்னீர்களே... இந்த வீடுதானே?''

இப்படியாகச் சென்னையோடு சில விஷயங்களில் போட்டி போடும் பாட்னாவில் ஆட்சி பீடம் உருவாகி முறிந்து விழுவதற்குக் காரணம் சாதி வெறியும் இன பலமும்தான். பூமிஹார் — ராஜபுத் இவ்விரு இனங்களும் பெரியவை. மைதிலி பிராமணர்கள் — காயஸ்தர்கள் அடுத்தபடி வருபவர்கள். ஆட்சியைக் கைப்பற்றும் விஷயத்தில் பணம் போட்டுப் பணம் எடுக்கிறார்கள். எனவே, அமைச்சரவையிலேயே லஞ்சம் பாரதித்த உண்மையாகிவிட்டது. தலையிலிருந்து வால் வரை இப்பழக்கத்துக்கு அடிமை. எனவே, நாட்டின் நலன் மறைந்துவிட்டது. தன்னலம் தலைதூக்கிவிட்டது. தடி எடுத்தவன் தண்டல்காரன் என்ற நிலை.

பலன், பிஹார் ராஜ்யம் பின்தங்கிய ராஜ்யமானது. இங்கு எந்தக் காரியமும் சரியானபடி நிகழ்வதில்லை.

உதவும் மனப்பான்மை கொண்ட நகர மக்கள் வெறும் வாயை மெல்லுவதில்லை. ஏறக்குறைய இருபத்து நான்கு மணி நேரமும் வெற்றிலையை மெல்லுகிறார்கள்.

சுகாதாரக் கமிஷனர் அலுவலகத்தின் படி ஏறிக் கொண்டிருந்த பொழுது ஒருவர் வியந்தார்: ''என்ன அதிசயம்!'' என்று !

''என்ன ?''

''படிக்கட்டுகள் இன்று சுத்தமாயிருக்கின்றன. சுற்றுச் சுவரில் வெற்றிலைச் சாற்றைக் காணோம் ! அதைக் கண்டுதான் இவர் அதிசயப்படுகிறார்!'' என்று விளக்கினார் பின்னோடு வந்தவர்.

நகரம் சீக்கிரம் விழித்துக் கொண்டாலும் நகர மக்கள் சீக்கிரம் விழித்துக் கொள்வதில்லை. ஆம், நகரம் சுறுசுறுப்புப் பெற நேரமாகிறது.

தென்னாட்டுக் குடும்பங்கள் பல இங்கு பணி புரிகின்றன. தங்களுக்கென்று சங்கம் அமைத்துக் கொண்டு தமிழ்க் கலை, பண்பாடு ஆகியவற்றுக்குச் சிறப்புப் பணியும் புரிகின்றன. தென்னாட்டு உணவு படைக்கும் இரண்டொரு ஹோட்டல்களும் உள்ளன.

இவற்றில் அதிகம் உணவு அருந்த வருபவர்கள் பிஹார் மாநிலத்தைச் சேர்ந்தவர்களே. வடைக்கும், தோசைக்கும், இட்டிலிக்கும் அவர்கள் காட்டும் ஆதரவு...? — சொல்லி முடியாது. சாம்பார் என்றால் உயிர்! என் கண்களுக்கெதிரிலேயே ஒருவர் பாம்பே ஹல்வாவுக்குத் தொட்டுக் கொள்ள ஒரு பிளேட் சாம்பார் கொண்டு வரச் சொன்னார் என்றால் பாருங்களேன் ! அறுசுவை உணவு அளித்துப் பிஹார் மாநில மக்களை மகிழ்விக்கும் இந்த ஹோட்டலுக்கு வெள்ளி விழா நெருங்குகிறது என்று மகிழ்கிறார் முதலாளி.

ஆனால் ஜயப்பிரகாஷ் நாராயண் அவர்களோ, 'இந்தியாவுக்குச் சுதந்திரம் கிடைத்து வெள்ளிவிழாவும் கொண்டாடி ஓய்ந்து விட்டது! மக்கள் என்ன சுகத்தைக் கண்டார்கள்?' என்று கவலைப்படுகிறார். அவரது இந்தக் கவலையால் உருவான இயக்கம் பிஹார் மாநிலம் எங்கும் சூடு பிடித்துள்ளது. அறியாமை இருளில் மூழ்கிக் கிடக்கும் மக்களிலிருந்து ஆட்சி பீடத்தில் உள்ளவர்கள் வரை இதை உணருகிறார்கள் ; ஆதரவும் தருகிறார்கள்.

பிராயம் முதிர்ந்த பத்திரிகாசிரியர் ஒருவர் 'இந்தியாவிலேயே குபேர சம்பத்து நிறைந்த ராஜ்யம் பிஹார். அறியாமையினால் அதைக் குப்பைமேடு என்று எண்ணி மக்களும் மந்திரிகளும் அமர்ந்திருக்கிறார்கள். மாணவர்களோ பயனற்ற படிப்பினால் உபாதையுறுகிறார்கள். படிப்புக்கும் வாழ்க்கைக்கும் சம்பந்தமே இல்லை என்ற நிலை. விவசாயிகளோ விலைவாசி ஏற்றத்தால் வயிற்றுக் கின்றித் திண்டாடுகிறார்கள். ஜயப்பிரகாஷ் நாராயண் உண்மையான ஜனநாயகம் வரவேண்டும் என்ற முயற்சியில் ஈடுபட்டிருக்கிறார். மக்கள் ஆதரவும் மாணவர் ஆதரவும் அமோகமாகப் பெருகியிருக்கின்றன. நாடே இதனால் நலம் பெறப் போகிறது' என்று மகிழ்கிறார்.

''மாணவர் இயக்கம் இளமைப் புரட்சி என்ற பெயரில் நன்றாக வேரூன்றியிருக்கிறது. இது மெய்தான். ஆனால் ஓராண்டு படிக்காததால் நாட்டுக்கோ மாணவர்களுக்கோ நலன் ஏற்பட்டுவிடுமா? நாராயண் நல்லதொரு நிர்மாணத் திட்டத்தைத் தரக்காணோமே!''— என்று ஐயம் எழுப்புகிறார் ஓய்வுபெற்ற ஐ.ஸி.எஸ். அதிகாரி ஒருவர்.

''என்ன விழிக்கிறீர்கள்? நான்தான் பூர்ணேந்து. (முழுமதி) என்னைப் பார்த்தால் முழுமதியாகத் தோன்றவில்லையா? அரைமதியாகவா தோன்றுகிறது?'' என்று இளநகையோடு வரவேற்கிறார் டாக்டர் பூர்ணேந்து நாராயண் சின்ஹா.

டாக்டர் பூர்ணேந்து மாநில அமைச்சராகவும் பணியாற்றியவர். கலகலப்பான சுபாவம் படைத்தவர். ''ஜயப்பிரகாஷ்ஜீ எதையும் படிப்படியாகச் செய்கிறார். எங்கேயாவது தவறு என்று தெரிந்தால் திருத்திக் கொள்ளத் தயங்கமாட்டார். மாணவர்களிடம் ஏற்பட்டிருக்கும் இந்த எழுச்சியைப் பயன்படுத்திக் கொண்டு கல்வித் துறையில் ஒரு புரட்சியே ஏற்படுத்தி விடுவார்!'' என்று நம்புகிறார்.

சட்டக் கல்லூரி மாணவர்கள் சிலரைக் கேட்டதற்கு, ''நீதியும் நெறியும் நடுத் தெருவில் நிற்கும்பொழுது இந்தப் படிப்பெல்லாம் எதற்கு?'' என்கின்றனர்.

ஜயப்பிரகாஷின் இந்த இளைஞர் புரட்சி இயக்கம் மாணவர்கள் மனத்திலே நீதி, நெறி,

உ

# திருமண நன்றி அறிவிப்பு



| திருப்பூர் ஸ்ரீ V. S. சுப்பரமணியம் அவர்களுடைய குமாரன் | கொமாரபாளையம் சுந்தரம் ஸ்பின்னிங் மில்ஸ் உரிமையாளர் ஸ்ரீ J. K. K. நடராஜா அவர்களுடைய குமாரத்தி |
| --- | --- |
| செல்வன் : | செல்வி : |
| **S. கிருஷ்ணராஜ் B. A. க்கும்** | **N. செந்தாமரைக்கும்** |

*1-7-1974-ஆம் தேதி திங்கட்கிழமை யன்று கொபாரபாளையம் "அன்னை இல்லத்தில்" நடைபெற்ற திருமண விழாவிற்கும், 2-7-1974-ஆம் தேதி செவ்வாய்க்கிழமை யன்று திருப்பூர் "ஸ்ரீ சௌடாம்பிகை அம்மன் கல்யாண மண்டபத்தில்" நடைபெற்ற வரவேற்பு வைபவத்திற்கும், நேரில் வருகை தந்து மணமக்களை வாழ்த்தி ஆசி கூறியவர்களுக்கும், தபால், தந்தி மூலம் வாழ்த்துக்கள் அனுப்பியவர்களுக்கும் இதன் மூலம் எங்களுடைய உளங் கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.*

**திருமதி & திரு V. S. நாச்சிமுத்து செட்டியார், திருமதி & திரு V. S. சுப்பரமணியம்**
**திருமதி & திரு V. S. நாராயணசாமி**
**திருப்பூர் & கோயமுத்தூர்**

ஒழுக்கம் ஆகிய சீரிய சிந்தனையைக் கிளப்பி விட்டிருக்கிறது என்பதில் ஐயம் இல்லை. ஆனால் மாறுபட்ட கருத்துக்கள் கொள்ளாதவர்களும் இல்லை.

பாட்னா பல்கலைக் கழகத் துணைவேந்தர் தமது சந்திப்பில் கூறினார் : ''நான் இப்பொழுது பேசுவதை மிகவும் குறைத்துக் கொண்டுவிட்டேன். உங்களைப் போன்ற பத்திரிகையாளர்கள் தொணதொணத்து விடுகிறார்கள். மாணவர்கள் வகுப்புக்கு வருவது எப்படி இருக்கிறது என்று கேட்டால், 'நேற்றைக்கு இன்று குறைவில்லை!' என்று கூறி விடுகிறேன்!''

''எத்தனை பேர் வருகிறார்கள்?''

''நீங்களே போய்ப் பார்த்துக் கொள்ளுங்களேன் !''

கல்லூரிகள், பல்கலைக் கழகம் ஆகிய இடங்களுக்குச் சென்று பார்த்தால் வெறிச்சோடிக் கிடந்தது. அதைக் காணச் சகியாமல் ஆட்சி பீடம் போலீஸாரைக் கொண்டு வந்து நிரப்பி யிருக்கிறது. இதுதான் தினம் தினம் காணும் காட்சியாம்.

நகர்ப்புறத்து மாணவர்களைக் காட்டிலும் நாட்டுப்புறத்து மாணவர்கள் இயக்கத்தில் ஆர்வம் காட்டுகிறார்கள். ஆனால் அவர்களைப் பெற்றவர்களின் மனத்தில்தான் ஓர் ஐயம்; 'இப்படிக் குழந்தைகள் படிக்காமல் இருந்துவிட்டால், பின்னால் அவர்கள் கதி என்ன ஆவது?' என்று ! அந்த ஐயமும் ஜயப்பிரகாஷின் வயதை எண்ணித்தான். அவர் தலைமை தொடர்ந்து இருந்துவிட்டால் கவலை இல்லை என்ற எண்ணம். அவரைச் சுற்றி எதிர்ப்புச் சக்திகளும் ஆதரவு தருவது போலத் தந்து தங்கள் நலத்தைச் சாதித்துக் கொள்ள முயல்வதாகச் சிலர் சொல்கின்றனர். இத்தனை கேள்விகளுடன் ஜயப்பிரகாஷ் நாராயணனை அணுகியபொழுது அவர் கூறினார்:

''நானும் குறை நிறையுள்ள மனிதன் தான். இன்று நாடு போய்க் கொண்டிருக்கும் நிலையைக் காணும் பொழுது மனம் காட்டும் கிளர்ச்சியைச் செயல்படுத்த முயல்கிறேன். நாடு நல்வாழ்வு பெற வேண்டும் என்று பிரார்த்திக்கிறேன்.

''மாணவர்களை ஓராண்டுக் கல்வியை நிறுத்தும்படி நான் கூறும்பொழுது, பலர் கவலை தெரிவிக்கிறார்கள். நான் ஒரு பெரிய கல்வியாளன் இல்லை என்றாலும், இப்போதையக் கல்வி, மாணவர்களுக்கு நலன் பயக்கவில்லை என்பதைக் காண்கிறேன். சிறந்த கல்விமான்களைச் சந்தித்து வாழ்க்கைக்குப் பயன்படும் படியான நல்லதொரு கல்வித் திட்டத்துக்கு அடிகோல வேண்டும் எனக் கேட்க விருக்கிறேன். எல்லோரையும் பங்கு பெறத் தூண்டும் திட்டத்தில் குறைபாடுகள் நிகழா வண்ணம் பார்த்துக் கொள்வது முக்கியம். திட்டங்கள் படிப்படியாக உருவாகுமே ஒழிய, சிந்தனைகளையெல்லாம் ஒரே நேரத்தில் செயல்படுத்திவிட முடியாது. குற்றம் குறைகள் நேரின் களைய முற்படுவோம். ஒழுக்கமான நல்வாழ்வுக்கு வழிவகுக்க முயல்வோம்.''

நாற்பத்தைந்து நிமிடப் பேச்சின் ரத்னச் சுருக்கமான சாராம்சம் இது.

விடைபெறும்பொழுது ஸ்ரீ ஜயப்பிரகாஷ்ஜியிடம் வேடிக்கையாக 'அகம் குவான்' கதையைக் கூறிக் கேட்டேன், ''தாங்கள் இருக்கும் பகுதிக்குக் 'கதம் குவான்' என்று பெயர் எப்படி வந்தது?'' என்று !



மைசூர் ஸ்ரீ கணபதி சச்சிதானந்த சுவாமிஜி அவர்கள் இயற்றி, தாமே மெய்யுருகப் பாடிய பஜன்களை இசைத்தட்டுக்களாகக் கொலம்பியா க்ரா பனத்தார் சமீபத்தில் வெளியிட்டுள்ளனர். இந்த வெளியீட்டு விழா சென்னையில் தமிழக கவர்னர் திரு கே. கே. ஷா அவர்கள் தலைமையில் வெகு விமரிசையாக நடைபெற்றது. படத்தில் சச்சிதானந்த ஞானபோத சபாவின் தலைவர் திரு வி. ஜி. ராமச்சந்திரன் தமிழக கவர்னருக்குப் பிரசாதம் நல்குகிறார்.

'கதம்' என்னும் சொல்லுக்குப் படி (Step) என்று ஒரு பொருள். அராஜகம் என்ற சுவற்றைத் தாண்ட இந்தக் 'கதம் குவான்' பகுதியில் ஒரு படி கிடைத்துவிட்டதாகக் கூறலாம் என்பது என் எண்ணம்.

ஆனால் அவரோ, ''இந்தப் பக்கம் கதம்ப மரங்கள் இருந்திருக்கலாம். அதனால் அந்தப் பெயர் வந்திருக்கலாம்'' என்றார்.

'' 'குவான்' (கிணறு) என்னும் சொல்லோடு பொருந்தவில்லையே !''

'' அப்படியானால் ஆராய்ச்சியாளர்களைக் கேட்க வேண்டியதுதான்!''

'ஆராய்ச்சியாளர்களைத் தேடிப் போவானேன் ? என் ஆராய்ச்சிப்படியே, 'கதம் குவா'விலிருந்தவாறு நாராயணன் அராஜகச் சுவற்றைத் தாண்டும் முயற்சியில் ஒரு படி ஏறி யிருக்கிறார் என்று இருக்கலாமே!'

இவ்வாறு எண்ணியவாறே குரு கோவிந்த சிங்கின் 'குருத்வாரா'வைப் பார்க்கச் சென்றேன். அவர்கள் வழக்கப்படி அங்கு தலையைத் துணியினால் மூடியிருக்க வேண்டும். பாட்னா நகரத்திலேயே அது பரம தூய்மையான இடமாகக் காட்சி தந்தது. இன வேறுபாடின்றி எல்லோரையும் உள்ளே அனுமதித்துப் பிரசாதமும் தந்தனர். இந்த மாதிரி அகத் தூய்மை பாட்னா நகரம் முழுவதும் பரவுமானால்.... அதற்குத்தானே ஜெயப் பிரகாசர் போராடுகிறார் !

ஆனால் பிரபல பத்திரிகை நண்பர் ஒருவர் வேடிக்கையாகக் கூறினார் : 'பாடலிபுத்திர நகரம் உருவான காலத்திலேயே இந்த நகரத்துக்கு ஒரு சாபக்கேடு உண்டு. அதாவது வெள்ளம், பகைமை, நெருப்பு இம்மூன்றும் இந்த நகரத்தைத் தாக்கியவண்ணம் இருக்கும். அது இன்றளவும் தொடருகிறது!' வஞ்சவெள்ளம், உட்பகை, அருகை நெருப்பு! இந்தச் சாபக்கேடு ஸ்ரீ ஜயப்பிரகாஷ் நாராயண் தலைமையில் தீரட்டுமே! —அஜயம்

(ஸ்தாபிதம்: 1947)

# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு
## பிரைவேட் லிமிடெட்

"விஷ்ணு விகார்" — 17-A, பிளாங் ரோடு,
ஷண்முகானந்தா ஹாலுக்கு அருகில்
சயான் (கிழக்கு) பம்பாய்-22. D. D.
டெலிபோன்: 471455
தபால் பெட்டி 6759 : : தந்தி: "GROWRICH"

ஏலம் கேட்ட பிறகு டிவிடெண்டு அடையும் வசதியுள்ள கீழ்க்கண்ட

**1974 ஆகஸ்டு மாத புதிய குருப்புகள்**

**குறுகிய காலம்**
25 மாதங்கள்-25 அங்கத்தினர்கள்
முதல் ஏலத் தேதி: 11-8-74

| வகுப்பு | மாதச் சந்தா ரூ. | சீட்டுத் தொகை ரூ. |
|---|---|---|
| B | 100/– | 2,500/– |
| C | 50/– | 1,250/– |
| D | 25/– | 625/– |

**நீண்ட காலம்**
40 மாதங்கள்-40 அங்கத்தினர்கள்
முதல் ஏலத் தேதி: 25-8-74

| வகுப்பு | மாதச் சந்தா ரூ. | சீட்டுத் தொகை ரூ. |
|---|---|---|
| LTE | 500/– | 20,000/– |
| LTF | 250/– | 10,000/– |
| LTG | 125/– | 5,000/– |
| முதல் ஏலத் தேதி 18-8-74 | | |
| LTM | 50/– | 2,000/– |

நேரம்: காலை 8 மணி முதல் 10-30 வரை; மாலை 4 மணி முதல் 7-30 வரை
வார விடுமுறை: திங்கட்கிழமை

தலைமை அலுவலகம் & பதிவு செய்யப்பட்ட அலுவலகம்
**"பாலுஸேரி பில்டிங்ஸ்"**
3, சிங்காராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி, சென்னை—600005
தபால் பெட்டி 414
கிளைகள்: பெங்களூர் — கல்கத்தா — புது டெல்லி — கோயம்புத்தூர்

இலவசப் பிரகடனத்திற்கு எழுதுங்கள்

சிட்டுகள் ஒதுக்குதல் கம்பெனியின்
உரிமையைப் பொறுத்தது




எங்கள் சேவை உங்களுக்குத்தேவை

# 1. வழக்கு

காலை ஒன்பது மணியிலிருந்தே நீதிமன்றத்தில் கூட்டம் கூடத் தொடங்கிவிட்டது. அன்று பரபரப்பான ஒரு வழக்கு நடைபெறவிருந்தது. பத்திரிகைகளில் ஏற்கனவே அது பற்றி ரசமான செய்திகள் வெளியாகியிருந்தன. நீதி மன்றத்தில் பதினொரு மணியளவில் கட்டுக்கடங்காத கூட்டம் கூடிவிடவே, போலீஸ்காரர்கள் ஒழுங்குபடுத்த வேண்டியிருந்தது.

வழக்கு நடைபெறவிருந்த பெரிய அறைக்குள் வழக்கறிஞர்கள் நிரம்பியிருந்தார்கள். முன் வரிசையில் இடது பக்கத்தில் அரசாங்க வழக்கறிஞர் முனுசாமி, கம்பீரமாக அமர்ந்திருந்தார். அவருக்கு இடது பக்கத்தில் போலீஸ் இன்ஸ்பெக்டரும் வலது பக்கத்தில் சப் இன்ஸ்பெக்டரும் தங்கள் மீசைகளைத் தடவிவிட்டுக் கொண்டு அமர்ந்திருந்தார்கள். அவர்களுக்குப் பின்வரிசையில் இருந்த வழக்கறிஞர் கருணாகரன், முகத்திலிருந்த பருக்களைக் கிள்ளிவிடுவதில் மூழ்கியிருந்தார். அவருக்குப் பக்கத்தில் அவருடைய ஜூனியர் கான் முகமது, விரல் நகத்தைக் கடித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார். அவரைச் சுற்றிலும் ஒருவித நெடி வீசிக் கொண்டிருந்தது. கருணாகரன் மூக்கைச் சுளித்தார். இரு முறை தும்மினார்.

''என்னப்பா நாற்றம் இது, மூக்கை அரிக்கிறதே!'' என்றார் கருணாகரன்.

கான் முகமது ஓர் அசட்டுச் சிரிப்பை உதிர்த்தார். ''இது வெளிநாட்டுப் பௌடர். வாசனை கொஞ்சம் அதிகம்'' என்றார்.

''முகப் பௌடருக்கா இந்த வாசனை ? காட்டமா யிருக்கிறதே!'' என்று கூறி மீண்டும் இரு முறை தும்மினார். பக்கத்தில் இருந்த பிராஸிக்யூட்டர் முனுசாமி சிரித்தார்.

''உங்கள் ஜூனியர் முகத்தில் பூசியிருக்கும் பௌடருக்கே இவ்வளவு காட்டமான வாசனை இருக்குமானால், இவர் உபயோகிக்கும் சென்ட் எவ்வளவு காட்டமாயிருக்குமோ?'' என்றார்.

'' எல்லோரும் ஓட வேண்டியிருக்கும் '' என்றார் கருணாகரன்.

''இன்றைக்கே கேஸை முடித்துவிடலாமா?'' என்று பிராஸிக்யூட்டரைப் பார்த்துக் கேட்டார் எதிர் வரிசையில் இருந்த வழக்கறிஞர், ஆவுடையப்பபிள்ளை.

அவருக்குப் பதில் சொல்ல முனுசாமி முனைந்த போது, பின்னாலிருந்த கருணாகரன் காலை மிதிக்கவே திரும்பிப் பார்த்தார்.

''டாக்டரை நாளைக்குத்தான் விசாரிக்க முடியும். இன்றைக்கு வேண்டாம்'' என்றார் கருணாகரன் இரகசியமாக.

''ஏன்? மொத்தமே ஐந்து சாட்சிகள் தானே? டாக்டரை மத்தியானம் விசாரித்து விடலாமே!'' என்றார் முனுசாமி.

''வேண்டாம் சார். டாக்டர் இன்றைக்கு வேண்டாம். இன்னும் ஆசாமி வழிக்கு வரவில்லை.''

''ஓ....!'' என்று தலையை அசைத்துவிட்டுத் திரும்பினார் முனுசாமி. ''இன்றைக்கு முடியாது சார். டாக்டர் இன்றைக்கு வரவில்லை. திங்கட்கிழமை முடித்துவிடலாம்'' என்று ஆவுடையப்பபிள்ளையைப் பார்த்துச் சொன்னார்.

''டாக்டரை பதினைந்து நிமிஷங்களில் விசாரித்து அனுப்பிவிடலாமே.... வீணாக நாளைக் கடத்துவானேன்?'' என்றார் பிள்ளை.

முனுசாமி இதற்குச் சம்மதித்துவிடக் கூடாது என்பதற்காகப் பின்னாலிருந்து அவருடைய குதிங்காலை அழுத்தி மிதித்தார் கருணாகரன்.

''டாக்டருக்கு இன்று வர முடியாதுபோல் இருக்கிறது.... முதல் சாட்சியிடமே உங்கள் விசாரணை இன்று முழுதும் இருக்குமே!'' என்று கூறிச் சிரித்தார் முனுசாமி.



''என்னுடைய குறுக்கு விசாரணை உங்கள் விசாரணையைப் பொறுத்திருக்கிறது'' என்றார் ஆவுடையப்பபிள்ளை.

''என்னுடைய விசாரணை ரத்தினச் சுருக்கமாக இருக்கும்.''

''ஏன், வழக்கில் பலமில்லையோ?''

''நீங்கள் அசைக்க முடியாத வழக்கு இது. அதனால்தான் என் விசாரணை நீள வேண்டியிருக்காது. ஒரு சில கேள்விகள்தாம். இருந்தாலும் முதலாவது சாட்சியைப் பார்த்து விட்டால் பிறகு நீங்கள் குறுக்கு விசாரணையை நீட்டிக் கொண்டிருப்பீர்கள்'' என்று முனுசாமி கூறியதும் பக்கத்திலிருந்த மற்ற வழக்கறிஞர்கள் சிரித்தார்கள்.

''முதலாவது சாட்சி என்ன ரம்பையா, ஊர்வசியா?'' என்று கேட்டார் ஒரு வயதான வக்கீல்.

''வருவாள் பாருங்களேன்'' என்றார் அரசாங்க வக்கீல் முனுசாமி.

''பார்த்துக் கொண்டே யிருந்தால் குறுக்கு விசாரணை எப்படி நடைபெறும்?'' என்று கேலி செய்தார் இன்னொரு வக்கீல்.

இந்தக் கேலிப்பேச்சைஆவுடையப்ப பிள்ளை ரசிக்கவில்லை. அவருக்கு இடது பக்கத்தில் அமர்ந்திருந்த அவருடைய ஜூனியர்களான சம்பத்தும் நளினியும் உள்ளூறச் சிரித்துக் கொண்டிருந்தார்கள். தம்முடைய ஜூனியர்களுக்கு எதிரில் அப்படி ஒரு விரசமான கேலிப் பேச்சை விரும்பாததால் முகத்தைச் சுளித்தார் ஆவுடையப்பபிள்ளை.

''மிஸ்டர் பிள்ளைக்கு இதில் ரசனை கிடையாது'' என்றார் ஒரு வக்கீல்.

''ஏன்? வயது இன்னும் அறுபத்தைந்துகூட ஆகியிருக்காதே!'' என்றார் கருணாகரன் குறுக்கிட்டு.

கருணாகரனின் கேலிப் பேச்சை விரும்பாத ஆவுடையப்பபிள்ளை, ''இதெல்லாம் வயதைப் பொறுத்த விஷயமில்லை. மனத்தைப் பொறுத்தது. உங்களுக்கு எழுபது வயது ஆனாலும் இந்தச் சபலம் போகப் போவதில்லை'' என்றார்.

''எழுபதென்ன, தொண்ணூறு ஆனாலும் நான் 'ஆக்டி'வாகத்தான் இருப்பேன்'' என்று வெடுக்கெனப் பதில் சொன்னார் கருணாகரன்.

''ஆக்டிவாக இருக்க வேண்டும் என்று ஆசை மட்டும் இருந்தால் போதுமா? வெளியில் சொல்லிக் கொள்ளலாம், ஆக்டிவாக இருப்பதாக'' என்று ஆவுடையப்ப பிள்ளை சொன்னதும் அறைக்குள் குபீரென்று சிரிப்பொலி எழுந்தது. கருணாகரனின்முகம் கன்றியது. ஏற்கனவே கறுத்து



அம்மைத் தழும்புடன் விகாரமாயிருந்த அவருடைய முகம் இப்போது இன்னும் விகாரமாயிற்று. ஆவுடையப்பபிள்ளையின் பேச்சில் மறைந்து கிடந்த உண்மை பலருக்கும் தெரிந்திருக்குமோ என்னும் எண்ணம் கருணாகரனின் மனத்தை அரித்தது. எல்லோரும் ஏளனமாகத் தன்னைப் பார்ப்பதாகக் குமுறினார். ஆவுடையப்பபிள்ளை மீது அளவு கடந்த கோபமும் வெறுப்பும் தலைதூக்கின.

கருணாகரனுக்கு வயது ஐம்பத்தைந்து. இந்த வயதிலும் மூன்றாவது கல்யாணம் செய்திருந்தார். பெண்கள் விஷயத்தில் அவருடைய மனம் எவ்வளவு பலவீனமானதோ, அந்த அளவுக்கு அவர் உடலும் பலவீனப்பட்டிருந்தது. இதனால் மனத்தின் ஆசைகளை உடலால் பூர்த்தி செய்து கொள்ள முடியாமல் அவர் கஷ்டப்பட்டார். இப்படி அவருக்கு நேர்ந்து விட்டதற்குப் பலவிதமான காரணங்கள் வதந்திகளாக உலவின. இந்தப் பலவீனத்தை உலகிடமிருந்து மறைக்கத்தான் மூன்றாவது முறையாகக் கல்யாணம் செய்திருந்தாரோ என்னவோ? கருணாகரனின் முகத்தில் தெரிந்த உணர்ச்சிகளைக் கண்டதும் ஆவுடையப்பபிள்ளையின் மனம் வருந்தியது. கருணாகரன் பற்றி நாம் கேள்விப்பட்டிருப்பதெல்லாம் உண்மையாயின் அவர் அனுதாபத்துக்குரியவர் என்று எண்ணினார். இவ்வளவு கூட்டத்தில் அவரைப் பற்றி அவ்விதமாகத் தாம் பேசியிருக்கக் கூடாது என்று தம்மையே கடிந்து கொண்டார். பொதுவாக ஆவுடையப்பபிள்ளை எவர் மனமும் புண்படும்படி பேசுவதில்லை. ஆனால் இன்று தம்மைப் பற்றிப் பிறர் பேசியது விரசமாகப் போகவே தம்மை மீறிய கோபத்தில் அவ்விதம் கூறிவிட்டார். அவர் சொன்னதில் உண்மை இருந்தாலும்கூட ஒருவரைப் பற்றிப் பொது இடத்தில் அவ்வளவு கூட்டத்தில் அம்மாதிரி பேசியது தவறுதான் என்பதை உணர்ந்தார்.

சற்று நேரம் அந்த அறைக்குள் மௌனம் நிலவியது. ஆவுடையப்பபிள்ளையின் சொற்களால் ஏற்பட்டுவிட்ட புண்ணை மனத்தால் நக்கி நக்கித் துடைத்துக் கொண்டிருந்தார் கருணாகரன். புண்ணின் வேதனை, உள்ளூற மிருந்த வெறுப்பையும், பகையையும் தோற்றுவித்துக் கொண்டிருந்தது.

நளினி மெதுவாகச் சம்பத்தின் காதுப் பக்கம் குனிந்து, "ஏன் எல்லோரும் சிரிக்கிறார்கள்?" என்று இரகசியமாகக் கேட்டாள்.

"அப்புறம் சொல்கிறேன்" என்று கூறி விட்டுக் கருணாகரனைப் பார்த்தான் சம்பத்.

இந்தச் சமயத்தில், "சைலன்ஸ்...." என்று ஒரு குரல் கேட்கவே, அறையிலிருந்த அனைவரும் மரியாதையுடன் எழுந்து நின்றார்கள். அறைக்குள் வந்த நீதிபதி நாகசுந்தரம், தம் நாற்காலியில் அமரும்வரை அனைவரும் நின்றுகொண்டிருந்தார்கள். அவர் அமர்ந்ததும் மற்றவர்களும் அமர்ந்தார்கள்.

சற்று நேரத்தில் குற்றவாளிக் கூண்டில் ஓர் இளைஞன் வந்து நின்றான். எல்லோருடைய பார்வையும் அவனை மொய்த்தது.

"பார்த்தால் ஹைஸ்கூல் பையன் மாதிரி இருக்கிறான்; இவனா?" என்று ஒரு வக்கீல் சந்தேகத்தோடு முனகினார்.

"பார்க்கத்தான் அப்படி. வயது இருபதாகிவிட்டது. அவன் செய்திருக்கும் காரியம்...." என்றார் அரசாங்க வக்கீல்.

"இந்தக் காலத்தில் எவனும் எதுவும் செய்வான் சார்" என்றார் இன்னொரு வக்கீல்.

"சார்! இன்னும் முதலாவது சாட்சி வரக் காணோமே!" என்று அவசரப்பட்டார் ஒரு வயோதிக வக்கீல்.

"ஐயோ பாவம், அவருக்கு அவசரம்..." என்றார் பக்கத்திலிருந்து ஒருவர்.

"வேலம்மாள்.... வேலம்மாள்....வேலம்மாள்....." என்று மூன்று முறை அலறினான், நீதி மன்றச் சேவகன். எல்லோரும் ஆவலோடு வாசலை நோக்கினார்கள். ஒரு பெண் உள்ளே வந்து சாட்சிக் கூண்டில் ஏறி நின்றாள். நூற்றுக்கணக்கான கண்கள் அவளைச் சுற்றி வளைத்தன.

அவளுக்கு இருபத்தைந்து அல்லது இருபத்தாறு வயது இருக்கும். கண்களில் மற்றவர்களுடைய பார்வையை எதிர்த்து வம்பு செய்யும் குறும்பு. நல்ல வளர்த்தியும் அதற்கேற்ற அமைப்புக்களும் பொருந்திய கட்டுடல். இடை தெரியும்படியாகப் புடவையை இறக்கிக் கட்டியிருந்த விதமும், மினி ரவிக்கையை அணிந்திருந்த பாணியும், புருவத்திலும் இமையிலும் மையிட்டு விகாரப்படுத்தியிருந்த ஒப்பனையும், கொண்டையின் விநோத அமைப்பும் அந்த அறை முழுவதையும் ஆட்கொள்வதாயிருந்தன.

எல்லாருடைய கண்களும் அவளையும், குற்றவாளிக் கூண்டில் நின்று கொண்டிருந்த இளைஞனையும் மாறி மாறிப் பார்த்துப் பொருத்தத்தைக் கணக்கிட்டுக் கொண்டிருந்தன.

அந்த வழக்கு, ரசனை மிகுந்தது மட்டுமல்ல, அரசியல் முக்கியத்துவம் வாய்ந்ததும்கூட. அந்த வழக்கை நிரூபித்துக் குற்றவாளிக்குத் தண்டனை வாங்கிக் கொடுத்துவிட்டால், — ஆளும் கட்சிக்கும், புரட்சிக் கட்சிக்கும் மாபெரும் வெற்றிதான். அரசியலில் இது ஒரு நபரைப் பழி வாங்க உதவும். அதுவும் வக்கீல் கருணாகரனுக்குத்தான் அதில் மிகுந்த அக்கறை. ஏற்கனவே இரண்டு பஞ்சாயத்துத் தேர்தல்களில் கருணாகரனின் புரட்சிக் கட்சியின் தோல்விக்குக் காரணமாக இருந்தவருடைய மானப் பிரச்னை இந்த வழக்கு. குற்றவாளியாக நிறுத்தப்பட்டிருக்கிறானே, அவனுடைய தந்தை ரகுபதி நாயுடு, ஒரு காந்தி பக்தர். ஆதியில் உப்புச் சத்தியாக்கிரகத்திலும், தனி நபர் சத்தியாக்கிரகத்திலும் ஈடுபட்டுப் பல முறை சிறைக்குச் சென்ற தியாகி. பல ஆண்டுகளுக்குமுன் காங்கிரஸ் கட்சியிலிருந்து விலகி விட்டார். ஒரு காலத்தில் தியாகமும், நேர்மையும் சேர்த்து வளர்த்துவிட்ட அந்த மாபெரும் ஸ்தாபனம் இப்போது, அவருடைய கணிப்பில், பாரத நாட்டை ஆளும் அருகதையை இழந்துவிட்டது. இந்த முடிவுக்கு அவர் வந்ததால், பஞ்சாயத்துத் தேர்தல்களில் சுயேச்சையாகவே போட்டியிட்டார். அவருக்கு எதிராகக் காங்கிரஸ் யாரையும் போட்டிக்கு நிறுத்துவதில்லை. அந்த அளவுக்குக் கட்சி அவர் மீது நன்றியோடு இருந்தது. அவருடைய ஊர் மக்களும் அவருடைய பெரு





மையை உணர்ந்து அவருக்கே வாக்களித்துப் பஞ்சாயத்துப் போர்டின் தலைவராக்கி நன்றியைச் செலுத்தினார்கள். அவரை எதிர்த்து நின்ற வக்கீல் கருணாகரன் இருமுறை தோல்வியுற்று டெபாசிட்டையும் இழந் தார். ரகுபதியினுடைய செல்வாக்கால் கருணாகரனின் புரட்சிக் கட்சி அந்தப் பகுதி யில் வேரூன்றவே முடியாமல் தவித்துக்கொண் டிருந்தது. ஆனால் சமீபத்தில் நடைபெற்ற பஞ்சாயத்துத் தேர்தலில் ஆளும் கட்சியும், புரட்சிக் கட்சியும் கூட்டுச் சேர்ந்து இயங்கிய போது, ஆளும் கட்சி அபேட்சகரின் பணமும், புரட்சிக் கட்சியின் அடாவடித்தனமும் நாயுடு வைத் தோற்கடித்து விட்டன. மூன்று வாக்குகள் வித்தியாசத்தில்தான் நாயுடு தோல்வியுற்றார். நாயுடுவுக்கு இரண்டாயிரம் ரூபாய்தான் நஷ்டம். ஆனால் வெற்றி பெற்றவருக்கு ஐம்பதினாயிரம் நஷ்டம். அந்த ஊர் மக்களுக்கு நேர்மையும், தியாகமும் நஷ்டம்.

நாயுடுவைப் பழி வாங்கச் சந்தர்ப்பத்தை எதிர்நோக்கி யிருந்தார்கள் ஆளும் கட்சிப் பிரமுகர்களும் வக்கீல் கருணாகரனும். அந்தச் சந்தர்ப்பம் இப்போது வந்துவிட்டது. ரகுபதி நாயுடுவின் மகன் குருசாமியைக் குற்றவாளிக் கூண்டில் நிறுத்தியாகிவிட்டது. அவனுக்குத் தண்டனையை வாங்கிக் கொடுத்துவிட்டால், பழி வாங்கும் படலம் பூரணமாகிவிடும். இனி அந்தத் தொகுதியில் காங்கிரஸுக்குச் செல் வாக்கு இல்லாமலும் போய்விடலாம்.

கருணாகரனின் பார்வை அந்த அறை முழுவ தும் சுழன்றது. நாயுடுவைக் காணவில்லை. அவர் மானமுள்ளவர். தம்முடைய மகன் மீது சுமத்தப்பட்டிருக்கும் கேவலமான குற்றச்சாட்டைக் கேட்ட போதே உடலும் உள்ளமும் குன்றிப் போனார். இப்போது நீதி மன்றத்துக்கு வர மறுத்துவிட்டார். நாயுடு வராதது கருணாகரனுக்குச் சற்று ஏமாற்ற மாகத்தான் இருந்தது.

''மிஸ்டர் முனுசாமி! சாட்சியை விசாரிக்க ஆரம்பிக்கலாமே !'' என்று நீதிபதி கூறிய தும் முனுசாமி தம்முடைய ஆசனத்திலிருந்து எழுந்தார்.

## 2. விசாரணை

அரசாங்க வழக்கறிஞர் முனுசாமி, வழக்கைப் பற்றி விசாரித்துக் கொண்டிருந்த போது, நீதிபதியின் பார்வை, அடிக்கடி சாட்சிக் கூண்டில் தலை குனிந்தவாறு நின்று கொண்டிருந்த வேலம்மாளின் பக்கம் சென்று கொண்டிருந்தது. முனிசாமி மிக உருக்கமாகப் பேசிக் கொண்டிருந்தார்.

''ஆண்துணை இல்லை என்பதைப் புரிந்து கொண்ட குற்றவாளிக்கு இந்தக் குற்றத்தைச் செய்யத் துணிவு ஏற்பட்டதில் வியப்பில்லை, யுவர் ஆனர்'' என்று முனுசாமி கூறிய போது நீதிபதி, இலேசாகச் சிரித்தார். ''ஆண்துணை இல்லாத பெண்களுக்கெல்லாம் இந்த மாதிரி ஆபத்து நேர்ந்து கொண்டா இருக்கிறது?'' என்று கேட்டார்.

''அநேகமாக நேரத்தான் செய்யும் யுவர் ஆனர். ஒரு பெண் நடுநிசியில் எவ்விதப் பயமுமின்றித் தனியே வெளியே செல்லக் கூடிய சூழ்நிலை எப்போது உருவாகிறதோ, அப்போது தான் இந்நாடு பூரண சுதந்திரம் பெற்றதாக அர்த்தம் என்று காந்திஜி சொன்னார். அந்த மாதிரி ஒரு சுதந்திரம் இன்னும் நம் நாட்டுக்குக் கிடைத்தபாடில்லை'' என்றார் முனுசாமி.

''அந்த மாதிரி சுதந்திரம் உலகத்தில் எந்த நாட்டிலும் இல்லை'' என்று குறுக்கிட்டுச் சொன்னார், ஆவுடையப்பபிள்ளை.

''பெண்ணுக்குத் துணை இல்லை என்னும் தைரியம்தான் குற்றவாளியைக் குற்றம் புரியத் தூண்டியிருக்கிறது'' என்று முனுசாமி மீண்டும் அழுத்திக் கூறிய போது நீதிபதி குறுக்கிட்டார்.

''உங்களுடைய சாட்சி அளிக்கும் தோற் றமே கூடத் தூண்டியிருக்கலாம் அல்லவா?''

அறைக்குள் சிரிப்பொலி எழும்பியது. அரசாங்க வக்கீல் சிரித்துக் கொண்டே ஒருமுறை சாட்சிக் கூண்டைப் பார்த்தார். பேச்சு முழுவதும் ஆங்கில மொழியில் இருந்ததால் விவரம் தெரியாமல் வேலம்மாள் தலையை நிமிர்த்திப் பார்த்தாள். எல்லா ருடைய பார்வையும் தன்னை நோக்கியதை உணர்ந்ததும், மீண்டும் தலையைக் குனிந்து கொண்டாள்.

''ஒரு வாரப் பத்திரிகையில் ஒரு சிறுகதை வந்தது ... அதாவது மறைக்க வேண்டியதை மறைக்கத் தவறுவது, மற்றவர்கள் குற்றம் புரியத் தூண்டுகிறது என்ற கருத்தில் ...'' என்றார் நீதிபதி.

''நாலைந்து மாதங்களுக்கு முன்னால் வெளி யான கதை'' என்று குறுக்கிட்டுச் சொன்

ளுன், ஆவுடையப்ப பிள்ளையின் ஜூனியர் சம்பத்.

''எஸ், அந்தக் கதைதான் ... பணத்தை வெளியே தெரியும்படி வைத்திருப்பவன் திருடனைத் தூண்டுவதுமாதிரி, கண்ணியமற்ற முறையில் உடை உடுத்துபவள் காமுகனைத் தூண்டுகிறாள் என்ற கருத்தில் அமைந்திருந்தது: இல்லையா மிஸ்டர் சம்பத்?'' என்று கேட்டார், நீதிபதி.

சம்பத், மரியாதையாக எழுந்து, ''எஸ், யுவர் ஆனர்'' என்று கூறிவிட்டு அமர்ந்தான்.

முனுசாமி திகைத்தார். வழக்கைப் பற்றிக் கருத்து வேறு திசையில் திரும்பி விடுமோ என்று பயந்து பரபரப்புடன் பேசினார்.

''நானும் அந்தக் கதையைப் படித்தேன். திறந்த வீட்டில் எந்த நாயும் நுழையும். நாய்தான் நுழையும்! ஆனால் கண்ணியமுள்ளவன் நுழைய மாட்டான். சமூகத்திலிருந்து அப்படிப்பட்ட நாய்களை விலக்கி வைக்கத்தான் சிறைச்சாலை இருக்கிறது.''

முனுசாமியின் சாதுர்யமான பேச்சைக் கேட்டுத் திகைத்தார், நீதிபதி. சில சமயங்களில் முனுசாமிகூடச் சாதுர்யமாகப் பேசி விடுகிறாரே என்று அதிசயித்தார்.

''சாட்சியின் தோற்றம் தூண்டுவதாயிருந்தாலும் அதற்காகக் குற்றவாளியை மன்னிக்க முடியாது யுவர் ஆனர்'' என்றார் முனுசாமி அழுத்தமாக.

''நோ ... நோ ... நான் அந்த அர்த்தத்தில் சொல்லவில்லை. தோற்றமும் குற்றம் புரியத் தூண்டியிருக்கலாம் என்றேன். அவ்வளவுதான்'' என்றார் நீதிபதி நாகசுந்தரம்.

''அவள் தோற்றம் குற்றத்துக்கு உடந்தையாயிருந்தது என்று கூடச் சொல்லலாம்'' என்றார் ஆவுடையப்பபிள்ளை குறுக்கிட்டு. அவருடைய இதழ்களில் குறும்புத் தனமான புன்னகை தோன்றியது.

முனுசாமி திரும்பி ஆவுடையப்ப பிள்ளையைப் பார்த்தார்.

''அப்படிக் கூறித் தப்பித்துக் கொள்ள முடியாது. யாரை உடந்தை என்று பழிக்கிறீர்களோ அவள்தான் இந்த வழக்கில் களவு கொடுத்தவள்'' என்று கோபமாகச் சொன்னார். அறைக்குள் சிரிப்பொலி எழுந்தது.

இரண்டு வழக்கறிஞர்கள் மோதிக் கொள்வதைப் பார்த்து ரசித்தார் நீதிபதி. பதில் சொல்ல ஆவுடையப்பபிள்ளைமுனைந்த போது நீதிபதி குறுக்கிட்டார். ஆவுடையப்ப பிள்ளையின் வாதத் திறமையையும், புத்தி கூர்மையையும், சொல்வாட்சியையும் நீதிபதி நன்கு அறிவார். அவரைத் தொடர்ந்து பேச அனுமதித்தால் முனிசாமியைப் பேச்சிலேயே நையப் புடைத்து வீழ்த்தி விடுவார் என்பதை உணர்ந்து ஆவுடையப்பபிள்ளையைப் பார்த்துச் சிரித்தபடியே கையமர்த்திப் பேச வேண்டாம் என்று தடுத்தார். பிறகு முனுசாமியைப் பார்த்து, ''மிஸ்டர் முனுசாமி! உங்கள் கருத்தைப் புரிந்து கொண்டேன். தொடர்ந்து சாட்சியை விசாரியுங்கள்'' என்றார். எந்த இடத்தில் வழக்கு விவரத்தை நிறுத்தினோம் என்பது முனுசாமிக்கு மறந்து விட்டது. சற்று நேரம் விழித்துக் கொண்டு நின்றார். மூளை வேலை செய்ய மறுத்தது. முனுசாமியின் சங்கடத்தைப் புரிந்துகொண்டார் நீதிபதி. முனுசாமியின் அறிவில் கறுகறுப்புக் கிடையாது என்பது நீதிபதிக்கு நன்கு தெரியும். இந்தத் தொழிலுக்கு எவ்விதத்திலும் லாயக்கில்லாத முனுசாமி அரசியல் செல்வாக்கினால் இந்தப் பதவியைப் பெற்றார் என்பதையும் அறிவார். இந்தமாதிரி தகுதியற்றவர்களின் பேச்சையெல்லாம் கேட்டுத் தொலைக்க வேண்டியிருக்கிறதே என்று உள்ளூறப் பொருமியவாறே, ''எஸ், ப்ரொஸீட்...'' என்றார்.



''என்னப்பா! ஸிமெண்ட் கண்ட்ரோல் விலை ரூ. 13தானே! நீ, ரூ. 31 சொல்றியே?''

''என்ன சார் செய்வது? சம்பள் மூட்டை ரூ. 18 சொல்றாங்களே!''

முனுசாமியின் சிந்தனை தொடர்பற்றுத் தவித்தது. நீதிபதி உதவினார்.

''இரவு எட்டு மணிக்கு மாட்டுக்கு வைக்கோல் போடுவதற்காகத் தொழுவத்துக்கு வந்தாள் என்றீர்கள் ... பிறகு?'' என்றார்.

''ஆ! ... எஸ் யுவர் ஆனர் ... அப்போது குற்றவாளி, சுவர் ஏறிக் குதித்து வேலம்மாளைப் பலாத்காரமாகக் கற்பழித்து விட்டான். உதவி கோரி வேலம்மாள் கூக்குரலிடவே, பக்கத்து வாய்க்காலில் குளித்துக் கொண்டிருந்த இருவர் ஓடி வந்து குற்றவாளியைப் பிடித்துக் கொண்டார்கள்.''

அரசாங்க வழக்கறிஞர் முனுசாமி சாட்சிக் கூண்டில் நின்ற வேலம்மாளை விசாரிக்கத் தொடங்கிய போதே அவள் அழத் தொடங்கி விட்டாள். அழுது கொண்டே பதில் சொன்னதால் அவள் கூறிய வார்த்தைகள் தெளிவாக இல்லை.

''மிஸ்டர் முனுசாமி! சாட்சி அழாமல் பதில் சொன்னால், கொஞ்சம் தெளிவாகப் புரியும்'' என்றார் நீதிபதி.

''இந்தாம்மா, அழாமல் தைரியமாகக் கோர்ட்டாரைப் பார்த்துப் பதில் சொல்'' என்றார் முனுசாமி.

வேலம்மாள் சேலைத் தலைப்பால் கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள். சம்பத் வியப்போடு திரும்பி ஆவுடையப்பபிள்ளையிடம், ''நன்றாக நடிக்கிறாளே. கண்ணீர் எப்படித்தான் வருகிறதோ!'' என்று மெதுவாகச் சொன்னான். (தொடரும்)

# உங்கள் குடும்பத்தின் ஆரோக்கியத்திற்கு வைட்டமின்களும் தாதுப் பொருள்களும் இன்றியமையாதவை

## அவை போதுமான அளவில் கிடைக்கின்றனவா?

வைட்டமின்கள் மற்றும் தாதுப்பொருள்களின் பற்றாக்குறை குடும்ப ஆரோக்கியத்தைப் பாதிக்கக் கூடும். சோர்வு, ஜல தோஷம், பசியின்மை, உடல் இளைத்தல், சரும மற்றும் பல் உபாதைகளுக்குக் காரணம் இவற்றின் பற்றாக்குறைதான்.

திட்டமிடப்பட்ட உணவில் கூட இக்குறை காணப்படுகிறது. அவ்வாறின்றி குடும்பத்தில் ஒவ்வொருவருக்கும் தேவையான அளவில் இந்த இன்றியமையாத சத்துக்கள் கிடைக்க தினம் விம்க்ரான் கொடுங்கள்.

விம்க்ரானில் 11 முக்கிய வைட்டமின்களும் 8 தாதுப் பொருட்களும் அடங்கியுள்ளன. இரும்புச் சத்து—இரத்தப் பெருக்கத்திற்கும், சுறுசுறுப்பிற்கும், கால்ஷியம்—எலும்புகளையும், பற்களையும் உறுதியாக வைக்கவும், வைட்டமின் 'ஸி'—ஜல தோஷத்தை எதிர்க்கும் சக்தியை அதிகரிக்கவும், வைட்டமின் ஏ—சிறந்த கண்பார்வைக்கும் ஆரோக்ய சருமத்திற்கும், வைட்டமின் பி12—பசியைத் தூண்டி, தாங்கும் சக்தியை அதிகரிக்கும் இவற்றுடன் இதர போஷாக்குச் சத்துக்களும் உள்ளன. இன்று முதல் தினம் உட்கொள்வீர்—விம்க்ரான்!

# விம்க்ரான்®

பல்வேறு வைட்டமின்-தாதுச் சத்து மாத்திரைகள்
11 வைட்டமின்கள் + 8 தாதுப் பொருட்கள்



SQUIBB®

SARABHAI CHEMICALS PVT. LTD.

® இ.ஆர். ஸ்க்விப் அண்ட் ஸன்ஸ் இன்கார்ப்பரேடெட் அவர்களின் ரெஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க்காகும். ஸா.வி.பி.ஸ். இதை உபயோகிக்க உரிமை பெற்றவர்கள்.

**ஒரே ஒரு விம்க்ரான் மாத்திரை உங்களை நாள் முழுதும் சக்தியுடன் வைத்திருக்கப் போதுமானது**

Shilpi-HPMA 2A/74 Tam



# வேண்டாத பரிசு



☐ ஜனாதிபதி கிரி: ரப்பர் ஸ்டாம்பு

சூ என்லாய்: பஞ்சசீல டைரி

ஜார்ஜ் பெர்னாண்டஸ்: சாவி கொடுக்காமலே ஓடும் ரயில் பொம்மை

கருணாநிதி: எம்.ஜி.ஆர். (உருவப்படம்)

எம்.ஜி.ஆர்.: பழைய 'கணக்கு' நோட்.

ம.பொ.சி.: மந்திரிகள் படங் கொண்ட ஆல்பம்.

பாரதக் குடிமகன்: சோஷலிஸ பாணி மெடல்.

சு. குழந்தைநாதன், எம்.ஏ.
கோ. புதூர், மதுரை - 7

☐ டைரக்டர் பாலசந்தருக்கு: 'உலகத்துப் பழமொழிகள்' பரிசுப் பதிப்பு.

எம். ஜி. ஆருக்கு: குதிரைமீது உள்ள சிவாஜி பொம்மை.

வி. ஜி. பி. சகோதரர்களுக்கு: முழுப் பணம் கொடுத்து வாங்கிய 'தவணை முறையில் சந்தோஷம்' என்ற புத்தகம்.

எஸ். கோபாலன்
குரோம்பேட்டை, சென்னை - 44

☐ கூவத்தை 'மணக்க' வைக்க முயற்சி எடுத்துக் கொண்டதற்காக: பொதுப்பணித் துறை அமைச்சருக்கு: ஒரு பாட்டில் பினாயில்.

சினிமா என்றாலே முகத்தைச் சுளிக்கும் திரு மொரார்ஜி தேசாய் அவர்களுக்கு: இரண்டு டிக்கட்டுகள் — 'பாபி' படத்துக்கு.

சென்னை நகர அரசு பஸ் கண்டக்டருக்கு: புளி மூட்டை.

திரு சோ.வுக்கு: ஒரு ஷாம்பு பாட்டில்.

சினிமா நடிகைக்கு: ஒன்பது கெஜம் புடவை.

வி. ரேவதி, சென்னை - 70

☐ காமராஜருக்கு: கறுப்பு சிவப்புக் கரைத் துண்டு.

கே. மணி, ஈரோடு

☐ ஹாண்டேக்கு: ஸ்டெதாஸ்கோப்.

அஞ்சு மகேந்துருவுக்கு: ராஜேஷ் கன்னா போட்டோ.

ரேகாவுக்கு: ஒரு பிளேட் உப்புமா.

மதியழகனுக்கு: குரங்குப் பொம்மை (அடிக்கடி கட்சி தாவுவதால்).

பூட்டோவுக்கு: தீபாவளி ஆட்டம் பாம்.

ஆர். கிருஷ்ணமாச்சாரி, சென்னை - 53

☐ வில்லி பிராண்ட் (மேற்கு ஜெர்மனி) ஸ்பை த்ரில்லர் நாவல்.

இந்து வெங்கடராமன், பெங்களூர்-27

☐ எஸ். எஸ். ராஜேந்திரனுக்கு: வயிற்று வலி மாத்திரை.

பாப்பா நந்தகோபால், பித்தாளைப்பட்டு

☐ சா. கணேசன்: சட்டை.

அம்பாமூர்த்தி, பெங்களூர் - 38

☐ மு. கருணாநிதி: பன்ரொட்டி

ம. பொ. சி.: பொய் மீசை.

எஸ். விஸ்வநாதன்
கருங்கல்பாளையம், ஈரோடு - 3

☐ சத்தியவாணி முத்து அம்மையாருக்கு: மகாத்மா காந்தியின் சிறிய உருவச் சிலை ஒன்று.

எம்.ஜி. ராமச்சந்திரன் அவர்களுக்கு: வருமானவரி கைப்புத்தகம்.

டி. எஸ். ரகுநாதன், சென்னை - 34



# இப்போது அதிக வட்டி!

## இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க்

உங்கள் டெர்ம் டெபாஸிட்டுகளுக்கு

**முன்பு எப்போதையும்விட அதிக வட்டி அளிக்கிறது-**

| 23-7-1974 முதல்<br>டெபாஸிட் காலம் | வட்டி விகிதம்<br>ஆண்டுக்கு<br>சத விகிதம் |
|---|---|
| 1. 91 நாட்களும் அதற்கு மேலும் ஆனால் 6 மாதங்களுக்குக் குறைவாக | 5½ |
| 2. 6 மாதங்களும் அதற்கு மேலும் ஆனால் 9 மாதங்களுக்குக் குறைவாக | 6 |
| 3. 9 மாதங்களும் அதற்கு மேலும் ஆனால் 1 ஆண்டுக்குக் குறைவாக | 7 |
| 4. 1 ஆண்டும் அதற்கு மேலும் ஆனால் 3 ஆண்டுகளுக்குக் குறைவாக | 8 |
| 5. 3 ஆண்டுகளும் அதற்கு மேலும் 5 ஆண்டுகள் வரையில் | 9 |
| 6. 5 ஆண்டுகளுக்கு மேல் | 10 |

**நல்ல செய்தி!**

இப்போது அமலில் இருக்கும் டெபாஸிட்டுகளுக்கும் எஞ்சிய காலத்துக்கு இம்மாதிரி அதிக வட்டி கொடுக்கப்படும்.

**அதுமட்டுமல்ல!**

17 சத விகிதத்துக்கும் அதிகமாக வட்டி பெறுவதற்கும் ஐஓபியில் அரிய திட்டங்கள் உள்ளன.

அருகிலுள்ள ஐஓபி கிளைக்கு இன்றே வாருங்கள். உங்களுக்குத் தேவையான விவரங்களைப் பெறுங்கள்.



இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க்

# சோர் மசாயே ஷோர்

மக்கள் எதை எதை விரும்புகிறார்கள் என்று திரையுலகம் தீர்மானித்துள்ளதோ அவற்றையெல்லாம் இணைத்து ஒரு திரைக்கதை உருவாக்கிவிட்டார்கள். ''சோர் மசாயே ஷோர்'', 'போர் மசாயே போர்' - இந்த அறுவையிலிருந்து காப்பாற்று! - என்று நம்மை அலற வைக்கிறது.

விஜய் (சசிகபூர்) என்னும் பொறி இயல் படித்த ஏழை இளைஞனும் ரேகா (மும்தாஜ்) என்ற பணக்கார வீட்டுப் பெண்ணும் காதலிக்கின்றனர். கல்யாணத்தைப் பெண்ணின் தந்தை விஜய் ஏழை என்று காரணம் காட்டி நிராகரித்து விடுகிறார். ஆனால் ரேகாவும், விஜயும் கல்யாணம் செய்துகொள்வதில் உறுதியாக இருக்கின்றனர். இந்நிலையில், தந்தையும் அவர் நண்பரும் சேர்ந்து, ரேகாவைக் கெடுக்க வந்தவன் என்று அவன்மீது அபாண்டமாகப் பழியைச் சுமத்திச் சிறையில் தள்ளி விடுகின்றனர். சிறையிலிருந்த மூன்று கைதிகளுடன் வெளியே தப்பி வந்து விஜய் தன் காதலியைப் பழி தீர்த்துக் கொள்ளப் பார்க்கிறான். ஆனால் அவள் ஒரு குற்றமும் அறியாதவள் என்பதை உணர்ந்துகொள்கிறான். இப்போது ரேகா, சிறையிலிருந்து தப்பி வந்த விஜயுடன் வீட்டை விட்டு ஓடி விடுகிறாள். சிறையிலிருந்து தப்பி வந்த நான்கு கைதிகளும் ரேகாவும் சேர்ந்து சாந்தி நகர் என்ற கிராமத்துக்குச் சேவை செய்யத் தொடங்குகின்றனர். இப்படிக் கதை போகிறது.



சசிகபூர் - மும்தாஜ் காதல் காட்சிகள் கிளுகிளுப்பு ஊட்டும் நோக்கத்துடன் எடுக்கப்பட்டுள்ளன. ஆனால் நோக்கம் நிறைவேறவில்லையே! திருடர்கள் கிராமத்தைச் சூறையாடுவதும், அதற்கு இந்த நான்கு தப்பி வந்த கைதிகள் ஈடு கொடுத்துச் சமாளிக்கும் காட்சிகளும் அளவுக்கு மிஞ்சிப் போரடிக்கின்றன. பாராட்டக் கூடிய அம்சம் எதுவுமே இல்லாத ஒரு திரைப் படம் எடுத்தது ஒரு மாபெரும் சாதனை இல்லையா!

# கோரா காகஜ்

அற்ப விஷயத்துக்காகக் குடும்பங்கள் இரண்டுபட்டுப் பெரும் இன்னல்களுக்கு உள்ளாவதை நாம் அன்றாட வாழ்க்கையில் பார்க்கிறோம். அதைக் கலைப் பண்போடு மிக அழகான கதையாகப்பின்னி மிகநேர்த்தியாக எடுக்கப்பட்ட படம்தான் 'கோரா காகஜ்.'

வாழ்க்கை வசதிகள் பெற்ற ஒரு குடும்பத்தில் பிறந்த அர்ச்சனா (ஜயாபாதுரி) நடுத்தர வர்க்கத்தைச் சேர்ந்த பேராசிரியர் ஸுகேஷைக் (விஜயானந்த்) காதலிக்கிறாள். தாயின் விருப்பத்துக்கு மாறாகவும் தந்தையின் அனுமதியுடனும் அவனை மணக்கிறாள். தாய்க்குச் செல்வச் செழிப்புள்ள மருமகன் தனக்கு வாய்க்கவில்லையே என்ற ஆற்றாமை. அந்த ஆற்றாமையைத் தனது செல்வத்தால் நிறைவு செய்து தீர்த்துக் கொள்ளப் பார்க்கிறாள். சீமான்கள் வீட்டுக்கு அலங்காரமாக விளங்கக் கூடிய குளிர்பதனப் பெட்டி, டெலிபோன் போன்றவற்றை அர்ச்சனாவின் தாயார் மருமகன் வீட்டில் வைக்க ஏற்பாடு செய்கிறாள். இது ஒவ்வொன்றும் தனது ஏழைமையை இடித்துக்காட்டுவதாக ஸுகேஷுக்குப் படுகிறது. கணவனின் உணர்ச்சியைப் புரிந்து கொண்டும் தாயின் மேலிருக்கும் பாசத்தால் அவனை விட்டுக் கொடுக்க முடியாமல் பரிந்து பேசுகிறாள் அர்ச்சனா. இப்படிப் பல நிகழ்ச்சிகள் கணவன் மனைவியிடையே பெருத்த மனத்தாங்கலை, பிளவை ஏற்படுத்திவிடுகின்றன. காதலித்துக் கல்யாணம் பண்ணிக் கொண்ட தம்பதிகளைப் பிரித்து விடுகின்றன. பிறகு எப்பொழுது எங்கே எப்படிக் கூடுகிறார்கள் என்பதெல்லாம் சுவை படப் பின்னப்பட்டிருக்கிறது.



அர்ச்சனாவாக நடிக்கும் ஜயாபாதுரி மிக அருமையாகத் தமது பாத்திரத்தின் தன்மையை உணர்ந்து நடித்திருக்கிறார்.

ஸுகேஷாக நடித்த விஜயானந்துக்குப் பாத்திரப் பொருத்தமே இல்லை. வயது முதிர்ந்த கதாநாயகனாக — இரண்டாந்தாரம் ஏற்கும் கணவன் போலக் காட்சியளித்தாரே தவிர அர்ச்சனாவுக்கு ஏற்ற கணவராக வாய்க்கவில்லை.

'கோரா காகஜ்' — எழுதியும் எழுதப் படாத காகிதம் — போல் விளங்குகிறது அவர்கள் வாழ்க்கை. இம் மொழிகளுடன் தொடங்கும் பாடல் கருத்துச் செறிவும் இனிமையும் கொண்டு விளங்குகிறது.

'குட்டி'க்குப் பிறகு வந்துள்ள ஒரு சுத்தமான நல்ல ஹிந்திப் படம். — எஸ்.வி.எஸ்.



"மீட்டருக்கு மேலே ரெண்டு ரூவா போட்டுத் தாதாரு வண்டிலே ஏறு!" என்பதுதான் வாக்கு வாதமா யிருக்க வேண்டும்.

# சார்! டாக்ஸி வேணுமா சார்!

நேயர்களை இப்போது சென்னை சென்ட்ரல் ரயில் நிலையத்துக்கு அழைத்துச் செல்கிறேன்! அதிகாலை நேரம்.

சென்ட்ரல் ஸ்டேஷன் முகப்பிலுள்ள பரந்து கிடக்கும் சிமெண்டு வெளியில் வரிசை வரிசையாக, டாக்ஸிகள் மெயில்களும் எக்ஸ்பிரஸ்களும் கொண்டு வந்து கொட்டும் பிரயாணிகளை, அள்ளிப் போகத் துடிப்பாய் நிற்கின்றன.

டாக்ஸி ஓட்டிகள் எல்லோருமே இறங்கி மரியாதையுடன் நிற்கிறார்கள். எந்தப் பிரயாணியாக இருந்தாலும், அவர்கள் டாக்ஸி வேண்டி வந்தால், வரிசையாக நிற்கும் அந்த வண்டிகளில் நுழைத்துவிடப் போக்குவரத்துப் போலீஸ்காரர் இருவரும், சார்ஜெண்ட் ஒருவரும் நிற்கிறார்கள். 'வரிசை' ஏற்பாடு விமரிசையாக நடக்கிறது.



"எங்கேளுக்கு அந்த ரூபா தவிளா குடுத்துடு!" என்கிறாரோ?

மூன்று மாதங்களுக்குப் பத்தோ பதினைந்தோ ரூபாய்கள் கட்டி ரயில்வே இலாக்காவிலிருந்து பாஸ் வாங்கி அந்தச் சிமெண்டுத் தலத்தின் அனுபவ பாத்தியதை கொண்டாடும் டாக்ஸிகளுக்கு எப்படியும் 'கிராக்கி' உண்டு, போலீஸ்காரர்கள் உதவியுடன்.

அடேடே! டாக்ஸி டிரைவர்கள் 'அட்டென்ஷ'னில் நிற்கத் தொடங்குகிறார்களே! ஆமாம்!... சாவகாசமாக, சைக்கிள்காரரிடம் டீ குடித்துக் கொண்டிருந்த போலீஸ்காரரில் ஒருவர் கூட அவசரப்படுகிறாரே!... பெங்களூர் மெயில் சரியான நேரத்தில் வந்துவிட்டது!

ஒரு கணவன் — மனைவி ஜோடி. முதல் டாக்ஸியில் ஏறுகிறது. டாக்ஸிக்காரர் ஏதோ கேட்கிறார். அவருக்குக் கிடைத்த பதில் திருப்திகரமாக இருக்க வேண்டும். அதாவது, டாக்ஸியில் ஏறியவர்கள் குறைந்தபட்சம் சென்ட்ரல் நிலயத்தை விட்டுப் பதினைந்து கிலோ மீட்டருக்கு அப்பால் போகிறவர்களாக இருக்கலாம்! 'போணி'யாகிற 'கிராக்கி' பிரயோசனமுள்ளதுதான்! டாக்ஸி நகருகிறது.

இரண்டாவது டாக்ஸியில் ஓர் ஒற்றை ஆசாமி... தயங்கிக் கதவைத் திறக்கிறார். போலீஸ்காரர் அவரை உள்ளே தள்ளுகிறார். டாக்ஸி ஓட்டி ஒன்றுமே நடவாதமாதிரி சற்றுத் தள்ளி வருகிறார்!

மூன்றாவது டாக்ஸியில் ஏறப்போன ஒரு நபரைப் போலீஸ்காரர் நான்காவது டாக்சிக்காரர் பக்கம் ஒதுக்குகிறார். மூன்றாவது டாக்சி ஓட்டியின் முறைப்புக்குப் போலீஸ்காரரிடமிருந்து முறைப்பாகப் பதில் வருகிறது: ''நேத்திக்கு நான் ஏத்திவிட்ட பாசஞ்சரை ஜி. எச். அண்டே வம்பு பண்ணி இறக்கி விட்டுட்டு வேறே 'லாங் டிஸ்டன்ஸ்' கிராக்கி பிடிச்சுக்கிட்டுப் போயிட்டியாமே!



''லோடு போர்ட்டர்! வண்டியிலேருந்து சாமானே இறக்கறா காலே லேனேயிலே சாவுறிராக்கிக்கினே ஏத்திக்கிட்டு பட்ட வேறாரா போல!'' — இம்மாதிரி உரையாடல்கள் சகஜம்.

புகார் வந்திருக்கு! உன்னே நான் 'புக்'பண்ணப் போறேன்'' என்கிறார் போலீஸ்காரர்.

''அண்ணே! அண்ணே!'' என்று மூன்றாவது டாக்ஸி ஆசாமி பல்லேக் காட்டவும் போலீஸ்காரர் மேலும் பின் பக்கம் போகவும், இடையே கிடைத்த ஒரு நிமிட அவகாசத்தில் போர்ட்டர் ஒருவர் மூன்றாவது டாக்ஸிக்காரருக்கு அபயம் அளிக்கிறார். சட்டென்று ஒரு ஹோல்டாலே டிக்கியில் வைத்து பாசஞ்சரை உள்ளே தள்ளுகிறார். அந்தப் போர்ட்டருக்கும், டாக்ஸிஓட்டிக்கும் இடையே எத்தனையோ மௌன, பரஸ்பர இழைவுகள்!

வில்லிலிருந்து விடுபட்ட அம்பு போல் அந்த டாக்ஸி ஓட்டி, போலீஸ்காரர் முதுகைப் பார்த்து ஓர் ஏளனப் புன்னகையை உதிர்த்துவிட்டு, வரிசையிலிருந்து கிளம்பி நகருகிறார்!

இரண்டாவது ஆசாமி ஏன் இன்னும் கிளம்பவில்லே! என்ஜின் கோளாறு? கொஞ்சம் கவனியுங்கள்! ஒண்டியாகக் கையில் ஓர் 'ஏர் பாக்'குடன் வரும் நபரை முன்னால் நாலடி போய்ச் சந்தித்து ஏதோ கிசுகிசுக்கிறார். கார் முன் பக்கக் கதவைத் திறக்கு முன்பே, ஒரு சிவப்பு நிற இரண்டு ரூபாய் நோட்டு கைமாறுகிறது. 'ஏர்பாக்'காரர் முன் பக்க ஆசனத்தில் உட்கார்ந்ததும் வண்டி கிளம்புகிறது. உபரி வரும்படிக்கு அவர் வழி பார்த்து விட்டார். முதல் பாசஞ்சர் போகும் பாதையின் இடையே இறங்குபவராக இருக்கலாம்!

நேயர்களே இப்போது சென்ட்ரல் நிலையத்தை ஒட்டிக் கிழக்கே இருக்கும் வால்டாக்ஸ் ரோட்டுக்கு அழைக்கிறேன். அங்கே ஏழெட்டு டாக்ஸிகள் தெரு ஓரமாக நிற்கின்றன. பாஸ் வாங்காத, போலீஸ் போஸீசுகளுக்குக் கட்டுப்படாத டாக்ஸிகள். டாக்ஸி ஓட்டிகள் அவர்களுக்கு அவர்களே சட்டம் இயற்றிக் கொள்ளக் கூடிய சக்தி வாய்ந்தவர்கள். அவர்களுடைய பிரதான சட்ட ஆலோசகர்கள் அவர்களுடைய சில அபிமான போர்ட்டர்கள்.

வால்டாக்ஸ் ரோட் பக்கம் திமர் என்று என்ன பரபரப்பு?

''இந்தாப்பா ஆளே விடு! நான் பஸ்லியேலே போய்க்கறேன்! எனக்கு மெட்ராஸ் புதுசா என்ன?''



தாமதமாக வந்த ஹௌரா மெயில் அந்த ரோட்டை ஒட்டியுள்ள பதினோராம் நம்பர் பிளாட்பாரத்துக்கு வந்து விட்டது! போர்ட்டர்களுக்கு ஜமாதான். வால்டாக்ஸ் ரோடு பக்கமுள்ள கேட்டு வழியாகப் பிரயாணிகளை நடுத் தெருவுக்கு அழைத்து வருகிறார்கள்! அவ்வளவுதான்! அந்தப் பிரயாணிகள் இப்போது சைக்கிள் ரிக்ஷாக்காரர்களுக்கும் ஏதேச்சாதிகார டாக்ஸிக்காரர்களுக்கும் பலி ஆகப் போகிறார்கள்!

அதோ ஒரு கிழவனார், ஒரு பையன்... அந்த டாக்ஸிக்காரர் என்ன சொல்கிறார் கவனியுங்கள். "மீட்டர் ரிப்பேருங்க! அந்த வண்டிக்குப் போங்க!"

ஏன்? அவர்கள் திருவல்லிக்கேணிக்கோ, புரசவாக்கத்துக்கோ மூன்று ரூபாய் சார்ஜ் விகிதத்துக்குள் போக வேண்டியவர்களாக இருப்பார்கள்! அந்த டாக்ஸி ஓட்டியோ, அன்று முதல் கிராக்கியிலேயே ஒரு பத்து ரூபாய் நோட்டைப் பார்த்தாக வேண்டும் என்ற விரதத்துடன் வந்திருப்பார்.

அடுத்த வண்டிக்காரர் பிரயாணிகளை ஏற இறங்கப் பார்க்கிறார்! "மீட்டர் மேலே மூனு ரூபாய் போட்டுக் குடுப்பியா சார்?" கூசாமல் கேட்கிறார். பிரயாணிகள் இன்னும் மேலே நகருகிறார்கள்.

அடுத்தவர் இரண்டு ரூபாய் 'எக்ஸ்டிரா' வுக்குத் தலையசைக்கிறார். கிழவர் சிரமப்பட்டு ஏறி உட்காருகிறார்.

அதோ அங்கே பாருங்கள்! ஒரு வயதான அம்மாள்! போர்ட்டர் முன் போகப் பின்னால் வருகிறாளே!...இரண்டு சாதாரணப் பெட்டி, ஒரு படுக்கை, ஒரு டிப்பன்காரியர், அவ்வளவு தான்! உரிமையுடன் அந்த போர்ட்டர் ஒரு டாக்ஸியின் 'டிக்கி'யைத் திறந்து வைத்துவிட்டுப் பின் கதவையும் திறக்கிறான். அம்மையார் ஏறி உட்கார்ந்து கொண்டு கைப்பையைத் திறந்து பணம் எடுத்துக் கொடுக்கிறார்.

எவ்வளவு என்று கவனியுங்கள்! ஒரு ரூபாய் நோட்டும் ஓர் ஐம்பது பைசா நாணயமும்! போர்ட்டரின் முகம் போகும் போக்கையும் கவனியுங்கள்! தமிழ்த் திரைப்பட வில்லன்களின் சீறலும் குமுறலும் தோன்றுகிறதா?

"என்னம்மா! மூணரை ரூபா பேசிட்டு ஒண்ணரை ரூபா எடுக்கிறே!" மரியாதை என்பது அவன் குரலில் மருந்துக்காவது இருக்கிறதா?

"என்னப்பா சொல்றே!... ஒண்ணரை ரூபாய்தானே பேசினேன்."

"போம்மே! ஏழைங்க வயித்திலே அடிக்கணும்னு இப்படி எத்தனை பேர் கிளம்பியிருக்கீங்க..."

"என்னது அக்கிரமமா யிருக்கு!... பேசினது ஒன்னு..."

டிரைவர் குறுக்கிடுகிறார்: "இந்தாப்பா! உங்க கலாட்டாவுக்கு என் வண்டிதானா அகப்பட்டது? சாமானை எடப்பா! காலே வேளையிலே சாவுக்கிராக்கிகளை ஏத்திக்கிட்டு..."

"என்னம்மா சொல்லறே!... இவங்களெல்லாம் பாசஞ்சர்னு வந்துடறாங்க..."

அந்த அம்மையார் கூச்சலுக்குப் பயந்தவர் என்று அவனுக்கு மனோதத்துவ அடிப்படையில் தெரியும். இரண்டு ஒரு ரூபாய் நோட்டுக்கள் கைமாறுகின்றன! ஒரு ரூபாய் நோட்டை டாக்ஸி டிரைவர் கையில் அந்தப் போர்ட்டர் அமுக்குவதை அந்த அம்மாள் பார்க்க முடியாது! நாம் பார்க்கலாம்!... இதெல்லாம் நடிப்புக்குக் கூலி. எக்ஸ்டிரா இரண்டில் ஆளுக்குப் பாதி! கலாட்டா சோஷலிஸம்! இன்னமும் போர்ட்டர் தம் வெடுவெடுப்பை முகத்திலிருந்து அகற்றத் தயாரில்லை. நடிப்புக் கலை மன்னன்!

டாக்ஸி டிரைவர் மீட்டரைப் போடுகிறார்! "எங்கேம்மா?"

"பெசன்ட் நகர்."

"மொத்தமா லக்கேஜுக்குச் சேர்த்துப் பதினஞ்சு ரூபாய்!"

"மீட்டர் என்ன ஆச்சு?" — இது அம்மையார்.

"எங்க பொழைப்பு என்ன ஆச்சு? பெட்ரோல் விலே என்ன ஆச்சு? திரும்பறப்போ எம்ப்டி வண்டி வர்றது என்ன ஆச்சு?"

அம்மையாருக்குப் பதில் சொல்லத் தெம்பு இல்லை! வண்டி கிளம்புகிறது.

அதோ பாருங்கள்! இந்த சென்ட்ரல் ரயில் நிலைய முகப்பைப் பார்த்தவாறு நிற்கிறாரே டாக்டர் ரங்காச்சாரி — சிலையாக! புன் சிரிப்புடன்! அவர் தினம் நாள் முழுதும் இந்த டாக்ஸி பிடிக்கும் நாடகத்தை ரசித்துக் கொண்டுதான் இருக்கிறார்! நாமும் ரசிப்போம்! — நாம் டாக்ஸி தேடாதவரை!

— பட்டினத்தார்



**சரித்திர நாயகர்**

—————— வெண்பாப் போட்டி ——————

நம் பாரத நாடு சுதந்திரமடைந்த பிறகு அமரர்களானவர்களுள் உங்களுக்குப் பிடித்தமான சரித்திர நாயகன் அல்லது நாயகியைப்பற்றி ஒரு பாடலை வெண்பாவாக எழுதி அனுப்புங்கள். அவர் அரசியல் வாதியாகத்தான் இருக்க வேண்டுமென்பதில்லை. சரித்திர புருஷர் என்பதே முக்கியம். பிரசுரமாகும் வெண்பாக்களுக்குப் பரிசு உண்டு. வெண்பாக்கள் ஆகஸ்டு 8ம் தேதிக்குள் எங்களுக்குக் கிடைக்கும்படி அனுப்ப வேண்டும்.

பிரசுரமாகாதவற்றைத் திருப்பி அனுப்புவதற்கில்லை. கடிதப் போக்குவரத்து கிடையாது. உறை மீது 'சரித்திர நாயகர்' என்று குறிப்பிடவும்.

# பேபி ஃபுட் பற்றாக்குறை யிருந்தால் பாலமுல் உங்களுக்கு உதவ முடியும்

**பாட்டிலில் கொடுத்தல்**

குழந்தைக்கு மூன்று மாதம் ஆனதும், உணவு தயாரிக்கும் போது, பேபி ஃபுட்




ஒரு ஸ்பூனும், எளிதில் ஜீரணமாகும் பாலமுல் ஒரு ஸ்பூனுமாகக் கலந்து கொடுக்கத் தொடங்குங்கள். பிறகு படிப்படி யாக அதிகமாக்கி, பேபி ஃபுட் பாதியும், பாலமுல் பாதியுமாகக் கொடுங்கள்.

**ஸ்பூனால் ஊட்டுதல்**

சிறிது பால் அல்லது நீருடன் பாலமுல் கலந்து பசைபோல் ஆக்குங்கள். சுவைக்கு வேண்டிய சர்க்கரை சேருங்கள். காலையில் பாட்டிலில் கொடுப்பதற்குமுன்






இதை ஸ்பூனால் ஊட்டுங்கள். படிப்படியாய், ஒரு நாளைக்கு 2, 3 தடவைகளாக பாலமுலை, பழச்சாறு, பருப்பு, முட்டை, இவைகளோடு கொடுத்து, சுவைத்து இன்புறச் செய்யுங்கள்.

*100 கிராம், அமுல்ஸ்ப்ரே, பாலமுல் இரண்டையும் உணவுச் சத்தில் ஒப்பிட்டுப் பாருங்கள்.*

| | அமுல்ஸ்ப்ரே | பாலமுல் |
|---|---|---|
| புரதம் | 22.0 கிராம் | 22.0 கிராம் |
| கார்போஹைட்ரேட்ஸ் | 50.0 கிராம் | 60.0 கிராம் |
| கொழுப்பு | 18.0 கிராம் | 7.0 கிராம் |
| கால்ஷியம் | 1.0 கிராம் | 1.0 கிராம் |
| ஃபாஸ்ஃபரஸ் | 0.8 கிராம் | 0.8 கிராம் |
| இரும்புச் சத்து | 4.0 மி.கிராம் | 6.0 மி.கிராம் |
| வைடமின் A | 1500 இ.யு. | 1500 இ.யு. |
| வைடமின் D | 400 இ.யு. | 300 இ.யு. |
| வைடமின் $B_1$ | 0.6 மி.கிராம் | 0.5 மி.கிராம் |
| வைடமின் $B_2$ | 1.0 மி.கிராம் | 0.6 மி.கிராம் |
| வைடமின் $B_6$ | 0.3 மி.கிராம் | — |
| நிகோடினாமைட் | 6.0 மி.கிராம் | 5.0 மி.கிராம் |
| வைடமின் C | 30.0 மி.கிராம் | 50.0 மி.கிராம் |

# பாலமுல்



கெய்ரா டிஸ்ட்ரிக்ட் கோவாபரேடிவ் மில்க் ப்ரொட்யூஸர்ஸ் யூனியன் லிமிடெட், ஆனந்த்.

**பாலுடன் கூடிய தானிய உணவு ஏறக்குறைய அமுல்ஸ்ப்ரே**



வேடிக்கை அதிகமாகிப் போனால், வினையாகிப் போய்விடும்; அதே போல் ஹாஸ்யம் அதிகமாகிப் போனால் அசட்டுத்தனமாகப் போய்விடும். சித்திரமஹாலின் "உங்கள் விருப்பம்" அந்த எல்லையை எட்டியிருக்கிறது!

ராஜா, ராமு இருவரும் பணம் சம்பாதிக்க ஒரு வழி கண்டுபிடிக்கப் போக அது இருவருக்கும் காதலுக்கே வழி செய்து விடுகிறது! வில்லன்களை ஒழித்துக் கட்டி விடுகிறது!

ஜெயசித்ராவும், ஜெய்சங்கரும் விளையாட்டுக்காகக் காதலிக்கும் காட்சியிலிருந்தே தமாஷ் ஆரம்பமாகி விடுகிறது. தமாஷ் காட்சி என்பதனால், கட்டிப் பிடித்து அதிகப்படியாக ஒட்டி, உரசி விளையாடுவதை மன்னித்துவிடுவதா? ஜெய்சங்கர் நகைச்சுவைக் காட்சிகளுக்குள் தம்மை நன்கு பொருத்திக் கொண்டுவிட்டாரே! சபாஷ், ஜெய்சங்கர்!




தேங்காய் சீனிவாசன் ஹாஸ்யவெடிகளாகத் தீர்த்துக் கட்டி ஜமாய்க்கிறார். அவருக்கு ஜோடியாக வரும் மனோரமா கல்யாணமாகாத பெண்ணாக வந்து அருமையாக நடித்திருக்கிறார்.

ஜெயசித்ரா முறைப் பையன்களை ஒழித்துக் கட்டி, தமக்கு உகந்தவனைத் தேர்ந்தெடுக்கும் காட்சிகளில் முழுக்க முழுக்க ஹாஸ்யமாக நடித்து நல்ல பெயரைத் தட்டிக் கொள்கிறார்.

எம். ஆர். ஆர். வாசுவுக்கு வில்லன் பாகமானாலும் நிறைய சான்ஸ்.

கே. ஏ. தங்கவேலுவின் நகைச்சுவை நடிப்பு என்றுமே அலாதியானது. அந்தத் தரம் குறைந்துவிடுவதா? இப்படத்தில் நடித்துப் படத்தையும் உயர்த்தியிருக்கிறார்.

கவர்ச்சி நடனத்துக்கு ஏ. சகுந்தலா இருக்கிறார்.

ராமாராவ், ஐ. எஸ். ஆர். இவர்கள் இருவரும் படத்தின் நகைச்சுவைக்கு நல்லதொரு தூண்டுகோலாக இருக்கிறார்கள். வி. கே. ராமசாமி, பரம்பரை ஜமீந்தார்கள் ஆடி ஓய்ந்துவிட்டாலும் அவர்களை நமக்கு நினைவூட்டப் படம் முழுவதும் சக்கைப் போடு போடுகிறார்.

எப்போதுமே ஒரு சோகக் கதையைத் தயாரிப்பது பெரிய காரியம் இல்லை. பொருத்தமான கதை கிடைத்து, நல்ல நடிகர்களும் கிடைத்துவிட்டால் பிரமாதமாகப் படம் தயாரித்துவிடலாம். ஆனால் முழு நீள ஹாஸ்யப் படம் என்பது அப்படியல்ல. அது ஒரு பெரிய சோதனை. ஒருவனை அழ வைக்கிறதைவிடச் சிரிக்க வைப்பது பெரிய சாதனை. அந்தச் சாதனையில் ஓரளவு வெற்றி பெற்றிருக்கும் டைரக்டர் கே. கிருஷ்ணமூர்த்தி உண்மையிலேயே பாராட்டுக்குரியவர். திரைக் கதையும் அவருடையதுதான்.

கவிஞர் கண்ணதாசனின், "மஞ்சள் பூசி மஞ்சள் கொண்ட" என்ற பாட்டு நன்றாயிருக்கிறது. கோவை சௌந்தரராஜன், எல். ஆர். அஞ்சலியின் குரல்களில் இனிமையாக ஒலிக்கிறது. "பச்சைக்கிளி முத்துச் சரம்", "பாலூட்டி வளர்த்த கிளி" முதலிய 'ஹிட்'ஆன பாடல்களைச் சிறிது மாற்றிப் போட்டிருப்பதில் என்ன பெரிய விசேஷம் என்று சிலர் நினைக்கலாம். ஆனால் அந்தப் பாடல்களைப் பொருத்தமான இடங்களில் போட்டுக் கொட்டகையை அதிர வைத்திருக்கிறார்களே! அதைப் பாராட்டாமல் எப்படிச் சும்மா இருப்பது?

மருந்துக்குக்கூடச் சோகம் என்று ஒன்றுமில்லாமல், 'பெரிய நடிகர்களையும் போடாமல் ஒரு முழு நீள ஹாஸ்யப் படம் தயாரிப்பதென்றால் அதைத் துணிந்து புனைந்த சித்திரம் என்று கூற வேண்டும். அந்தத் துணிச்சலைப் பாராட்டுவோம்! அது என் விருப்பம்!

# குழந்தை சிரித்தது!

செய்தியில் விளைந்த சிறு கதை

## ரா. வீழிநாதன்

குழந்தை சிரித்தது! அவள் அழுதாள் !

என்ன காரியம் செய்துவிட்டாள் அவள் ?

அவள் படுத்திருந்த கட்டிலுக்கு அருகில் ஒருபுறம் முக்காலி. அந்த முக்காலியில் மருந்துக் குப்பி ஒன்று; சிரிஞ்சில் இணைத்த ஊசி ஒன்று. இரண்டுமே காலி !

மறுபுறம் கட்டிலை ஒட்டினாற்போல் ஒரு தொட்டில். அதில் ஏழெட்டு மாதமே ஆன மழலைச் செல்வம். சிரித்தபடி சமர்த்தாக எழுந்து அவள் மார்பகத்தைத் துழாவியது. பிஞ்சுக் கரங்களை நீட்டி.

கருவிழி எங்கோ செருக, வெள்ளை விழி விரிந்து படர அவள் குழந்தையைப் பார்த்தான். அதன் கபடமற்ற சிரிப்பைக் கண்டவள் கதிகலங்கிவிட்டாள். அழுகை பீறிட்டுக் கொண்டு வந்தது ! உதடுகள் மடிந்து விம்மின!

என்ன காரியம் செய்துவிட்டோம் ? நாம் செய்தது சரியா? இனி தவற்றைத் திருத்திக்கொள்ள முடியுமா ?

ஆசைக் கணவர்; அன்புக் குழந்தை. நமக்கு என்ன குறைவு? இவ்வளவு இருந்தும் இப்படிச் செய்திருக்கலாமா ?

''நிர்மலா ! நீ ஒரு நர்ஸ். உனக்குப் பிறக்கப் போகிறவன் ஒரு டாக்டர். அவனை உலகப் புகழ் பெற்றவனாக 'நர்ஸ்' செய்ய வேண்டியது உன் பொறுப்பு!''

அவனை அவள் உண்டாகியிருந்தபொழுது. அவளது கணவர் கட்டிய ஆசைக் கோட்டை இது. அந்த 'ஆசை டாக்டர்' வயிற்றுக்குள் வளர்ந்த பொழுது அவளைப் படாதபாடு படுத்தி விட்டான் ; பிரசவ வைராக்கியமே கூடக் கொள்ளச் செய்துவிட்டான் !

தாயைக் குடல் விளக்கம் செய்தபொழுது, அந்தக்குழந்தை அழுதது ! அவனோ மகிழ்ந்து சிரித்தான்!

'அப்பா!' மழலைச் செல்வம் தந்த இன்பம்தான் எத்தகையது! 'அம்மா!' பிறக்குமுன் அது கொடுத்த துன்பம்தான் எத்தகை

விஷ ஊசி போட்டு நர்ஸ் தற்கொலை

சென்னை, ஜூன் 21—

யது! இன்ப — துன்ப நேரங்களில், 'அப்பா, அம்மா' என்னும் இந்தச் சொற்கள் மகிழ்ச்சியும் ஆறுதலும் தருகின்றன. ஆனால் அவள் விஷயத்தில் இந்தச் சொற்கள் வேம்பாக, இல்லை, இல்லை! நஞ்சாகக் கசந்தன.

வேம்பு கசந்தாலும் மருந்துப் பொருள்; நன்மை பயக்கவல்லது. ஆனால் நஞ்சு?

இகலோகத் துன்பங்களை மாய்க்கும் அமுதமென நம்பி அவள் நஞ்சை ஏற்றுவிட்டாள்; ஆம், ஊசி மூலம் தன் உடலில் ஏற்றிக் கொண்டு விட்டாள்!

அவளைப் பெற்றவர்கள் பிள்ளைப் பிராயத்தில் அரும் பெருஞ் செல்வமெனத் தான் வளர்த்தார்கள். நடுத்தரக் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் எத்தனை படிக்க வைக்க முடியுமோ, அத்தனை படிக்க வைத்தார்கள். நர்ஸ் பயிற்சிக்கும் ஏற்பாடு செய்தார்கள்.

பின்னர், அவள் நல்ல வேலையில் அமர்ந்தாள். தந்தை ஓய்வு பெறும் நிலைமையில் இருந்த அந்தக் குடும்பத்துக்குப் பெருந்துணையாகத் திகழ்ந்தாள். கைநிறையச் சம்பாதித்த அவள் பணம் அந்தக் குடும்பத்துக்குத் 'தேம்பத் தேகின' உதவியது.

பெண் என்று இருந்தால், அவளுக்கும் ஆசை ஆவல்கள் பல இருக்கும் என்பதைப் பெற்றோர்கள் மறந்தார்கள். அவள் கொண்டு வரும் பணம் அவர்கள் கண்களை மறைத்தது. எனவே, அவளது திருமண விஷயத்தில் அக்கறையே காட்டாமல் இருந்தார்கள்.

கை நிறையச் சம்பாதித்த அவள், தனக்கென்று ஒரு காதலனைத் தேடிக் கொண்ட பொழுது, அந்தக் குடும்பத்தில் ஒரு புயல் அடித்தது.

''உன் வாழ்க்கையைப் பற்றிப் பெற்றோராகிய எங்களுக்கு அக்கறை கிடையாதா? நல்ல வரனாகத் தேடி உனக்கு மணம் முடித்து வைக்கிறோம். அவசரப்படாதே!'' என்றாள் பெற்ற தாய்.

''உனக்குத் தங்கை ஒருத்தி இருக்கிறாள். அவளுக்கோ படிப்பு ஏறவில்லை. அவளுக்கு ஒரு வழி செய்தபின் நீ கல்யாணம் செய்து கொள்ளலாமே!'' என்றார் பெற்ற தந்தை.

அவள் சம்பாதிக்கும் பணம் எங்கே தங்களுக்குக் கிடைக்காமல் போய்விடுமோ என்ற அச்சமே அவர்களை இப்படிப் பேச வைத்தது. தாயோ தங்களுக்கு அடங்கிய மாப்பிள்ளையாகத் தேடத் திட்டமிட்டாள். தந்தையோ தங்கையின் திருமணத்தை முடித்தபின் அவள் சுமையை இறக்கலாம் என்று எண்ணினார்.

ஆனால், அவள் காதல் உரம் பெற்றது. காதலிருவர்கருத்தொருமித்து ஆதரவு பட்டு இன்பம் காண விழைந்தது. தனது காதலனிடம் ஒரு நாள் அவள் கூறினாள், தன் பெற்றோரின் மனத்தின் அடித்தளத்திலுள்ளத்தகைய எண்ணங்கள், ஊடுபாவு ஓடுகின்றன என்று!

''அவ்வளவு தானே? நான் சம்பாதிக்கும்பணம் நம் இருவருக்கும் போதுமானது. உன் சம்பாத்தியத்தை வீணாமல் விரியாமல் உன் பெற்றோருக்கே கொடுத்து விடு!'' என்றான் அவன்.

''உங்களிடம் என்னையே ஒப்படைத்து விட்டபின், நான் எதற்கு வேலைக்குப் போக வேண்டும்? விட்டுவிடுகிறேன்!'' என்றாள் அவள்.

''கூடாது. நீ மேற்கொண்டிருக்கும் பணி புனிதமானது. அதனால் வரும் வருவாயை, உன் பெற்றோர்களுக்கு அளிப்பதனால், அவர்கள் சிரமப்படாமல் வாழ்க்கையை நடத்த முடியும். நான் உனது இந்தச் செயலைத் தவறாக எடுத்துக் கொள்ளமாட்டேன். இது சத்தியம். உன்னை நான் மணம் புரிந்துகொள்ளப் போகிறேனே ஒழிய உன் சம்பாத்தியத்தை அல்லவே!''

என்ன பெருந்தன்மை! — காதலனின் அந்தப் பெரும் போக்கில் மகிழ்ந்து போனாள்



அவள். கண் நிறைந்த கணவனை மட்டும் இன்றிக் கண்ணியம் மிகுந்த ஆடவனைக் கரம் பற்றியதில் அவளுக்கு அலாதித் திருப்தி !

ஆனால், அவள் பெற்றோருக்குத்தான் அவன் கண்ணியத்தில் நம்பிக்கை பிறக்கவில்லை. 'கறட்டோணானை' விழுங்கிய கதையாக ஐயம் கொண்டனர், எங்கே பெண்ணின் வருமானம் தங்களுக்குக் கிடைக்காமல் போய்விடுமோ என்று! பெண் தனிக்குடித்தனம் செய்யப் போகவே, அவர்கள் ஐயம் மேலும் வலுத்தது.

பலன், நட்சத்திரையன் கதைதான். முதல் தேதி பிறக்க வேண்டியதுதான், தாமதம் ! தாயும் தந்தையும் மாற்றி மாற்றிப் பெண் வீட்டைப் படையெடுக்கலாயினர். சொல்லம்பு பாய்ச்சிப் பெண்ணின் உள்ளத்தைத் துளைத்தெடுத்தனர். அத்தனைக்கும் அவள் பொறுமையின் பூஷணமாகத் திகழ்ந்தாள்.

அவள் தங்கைக்குப் படிப்புத்தான் ஏறவில்லையே ஒழிய வயது ஏறிக் கொண்டு வந்தது. அவள் திருமணத்தில் அக்கறை காட்டாத பெற்றோர்கள் அவள் தங்கை விஷயத்தில் அளவுக்கு மீறிய அக்கறை காட்டினார்கள். அதைக் கண்டு அவள் மனம் புழுங்கவில்லை. தங்கைக்காவது திருமணம் செய்ய வேண்டும் என்று அக்கறை காட்டுகிறார்களே !

தங்கைக்கு வரன் குதிர்ந்தது. வரதட்சிணைக்கும் கல்யாணச் செலவுக்கும் குறைந்தது எட்டாயிரம் தேவை என்ற நிலை ஏற்படவே, பெற்றோருக்கு மூத்த பெண்ணின் நினைவுதான் வந்தது. அவள்தான் அவர்களது பணங் காய்ச்சி மரம் !

பழம் தரும் மரங்கள் கல்லெறிபடுவது தானே உலக இயல்பு? பெற்றோர் பெண்ணைக் கொத்தி எடுத்தனர் பணத்துக்காக. ''உன் சேமிப்பு நிதியிலிருந்து எடுத்துக் கொடு ; கூட்டுறவுச் சங்கத்திலிருந்து கடன் வாங்கிக் கொடு !'' என்றெல்லாம் கூறினர்.

'' ஒரு வார்த்தை அவரைக் கேட்டுக் கொண்டு செய்கிறேன், அம்மா !'' என்றவளுக்குக் கேட்க நேரிட்ட பேச்சு கொஞ்சநஞ்சமில்லை. ''அவர் ! அவர் யாரடி ? எங்களால்தானேடி நீ? நாங்கள் படிக்க வைத்து உன்னை இந்த நிலைக்குக் கொண்டு வராவிட்டால் நீ இப்படிக் கொக்கரிக்க முடியுமோ ?'' தாய் நாவை நீளவிடவே, பெண் பேச்சைச் சுருக்கிக் கொண்டாள்.

'' உன் சால்சாப்பு எல்லாம் எங்களுக்குத் தேவையில்லை. இன்றைக்குப் பத்தாம் நாள் எங்களுக்கு இவ்வளவு பணம் வேண்டும். எப்படித் தருவாயோ, எனக்குத் தெரியாது '' என்று கெடு வைத்துச் சென்றாள் தாயார்.

அன்று மாலை, அவள் கணவனிடம் விஷயத்தைக் கூறியபொழுது, ''சமயத்துக்கு உதவாத பணம் எதற்கு? தாராளமாக எடுத்துக் கொடு. போதவில்லை என்றால், என்னைக் கேள். நானும் தருகிறேன், என் சேமிப்பிலிருந்து'' என்றான் அவன். இல்லறம் தரும் இந்த இன்பத்துக்கு எதிரே சொர்க்க போகம் எந்த மூலை? அவள் பூரித்துப் போனாள்?

ஆனால், அவளுடைய தாய் — தந்தை... ? ஒருவனைப் பற்றி ஒரு கருத்தை உள்ளத்தில் பதித்துக் கொண்டபின், அதை மாற்ற விரும்பாத பிரகிருதிகளாய் இருந்தார்கள்!

தன் மைத்துனியின் திருமணத்துக்கு அவள் கணவன் எத்தனையோ ஓடியாடி வேலை செய்தான்; வறட்டுக் கௌரவம் பார்க்காமல் ; மாப்பிள்ளை மரியாதையை எதிர்பாராமல்.

மாப்பிள்ளைக்குரிய கௌரவத்தை அவள் பெற்றோர் கொடுக்கவில்லை என்பது ஒருபுறம் இருக்கட்டும், தாட்சாயணியைப் பெற்றெடுத்த தக்ஷன் போல் மூத்த மாப்பிள்ளையை இழி சொல்லால் சாடிக் கொண்டிருந்தனர்.

''எங்கள் மகளின் வருமானத்தில் இவன் உடலை வளர்த்துக் கொண்டு திரிகிறான்! அந்த அசடும் இவனிடத்தில் என்னத்தைக் கண்டு, இவன் இழுத்த இழுப்புக்கு ஆடுகிறதோ, தெரியவில்லை ! சம்பாதிக்கும் பணம் அத்தனையையும் இவன் காலடிகளில் கொட்டிவிட்டு நிற்கிறது! ஒருநாள் இவன் கைவிட்டுப் போய் விடுவான். அப்புறம்தான் அதற்குப் புத்தி வரும்!'' என்பதுபோல் அவள் காதுபடவே கூறிக் கொண்டு திரிந்தார்கள்.

அவள் கணவன் அத்தனையையும் காதில் விழுந்தும் விழாதவன்போலப் பொறுத்தான். ஆனால் அவளால்தான் பொறுக்க முடியவில்லை. யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் குழந்தையைத் தூக்கிக் கொண்டு தன் வீட்டுக்கு விரைந்தாள். அவள் உள்ளத்தில் பெரும் புயல் ராட்சச வேகத்தில் வீசியது.

'என்ன அவமானம்? இந்தச் சொற்கள் என் காதில் விழுந்தவை போல், அவர் காதிலும் விழுந்தால் எப்படி மறுகிப் போவார் ? இப்படிப்பட்ட தாய் தந்தையரைப் பெற்ற நான் அவர் முகத்தில் எப்படி விழிப்பது ? என்னால்தானே அவருக்கு இத்தனை அவமானமும் ?'

அவள் படித்த படிப்பு நினைவு வந்தது. உள்ளத்தை உதடுகளால் கடித்துக் கொண்டு எழுந்தாள். தோளில் தூங்கிப் போயிருந்த குழந்தையைத் தொட்டிலில் கிடத்தினாள். அறைக் கதவைத் தாழிட்டுக் கொண்டு மூக்காலியில் வைத்திருந்த ஊசி மருந்தைத் தன் உடலில் தானே அளவுக்கு அதிகமாக ஏற்றிக் கொண்டாள்! தன் மனத் துயரை மாய்த்துக் கொள்ள மரணமே சரியான வழி என்று க்ஷண நேரத்தில் நிர்மானித்துச் செயற்பட்டு விட்டாள். கட்டிலில் போய்ப் படுத்தவளிடம் மருந்து தன் வேலையைச் செய்யத் தொடங்கியது. கண்களைக் கொண்டு போய் எங்கோ செருகியது !

அரை குறைத் தூக்கத்தில் இருந்து எழும் குழந்தை அழுவதுதானே இயல்பு? அதற்குப் பதிலாக அது சிரித்தது கலகலவென்று! 'என்ன காரியம் செய்துவிட்டாய் அம்மா நீ? என் மழலைச் சிரிப்பில் உன் துன்பங்களை மறந்து இன்பம் காணத் தெரியவில்லையே உனக்கு ! என்ன, போ ' என்பதுபோலிருந்தது அந்தச் சிரிப்பு !

இறுகிய கண்களை வெகு சிரமப்பட்டுத் திறந்து பார்த்தாள் அவள்.

வேடன் வில்லிலிருந்து வெளியேறிவிட்ட அம்பு திரும்பி வருமா ? அவள் அவசரப்பட்டு எடுத்த தவறான முடிவை இனி அவளால் திருத்திக் கொள்ள முடியுமா ?

பிறந்த பொழுது அழுத குழந்தை இப்போது சிரித்தது. அது பிறந்தபோது மகிழ்ந்து சிரித்த அவள் இப்பொழுது அழுதாள் !

தானிருப்பதையே
நினைவுறுத்தாது
தன்னிகரற்ற நிம்மதி தரும்...
அதுவே கம்ஃபிட் சானிடரி
டவலின் தனிச் சிறப்பு

பெண்ணென்று சொன்னாலே பெருந்துன்பம் சில நாளில்; கம்ஃபிட் ஒன்றுதான் கவலையை மறக்கச் செய்யும். பத்துமடங்கு ஈரத்தைப் பாங்காக உறிஞ்சும்...மற்றவற்றைவிட ஐந்துமடங்கு அதிவிரைவில். மென்மையோ மென்மை...முன்னே முட்டி நிற்காது, பின்னால் கண்தெரியும் தொல்லையில்லை—காரணம், நீரிலே கரைத்து விடலாம் நிம்மதியாக. அதுவே கம்ஃபிட்!

கம்ஃபிட் சானிடரி டவல் கவலையை மறந்து களிப்புடன் இருக்கச் செய்யும்!




க்ரிஸ்டின் ஹேநாடன் (இந்தியா) லிட்., கோத்தாரிஸ், கோவா கம்பெனியின் தரமான தயாரிப்பு.

NTARS-CH.4 TH



திருமதி

**சியாமளா ராஜகோபால்**

**திருச்சிராப்பள்ளி**

| தோற்றம்: | மறைவு: |
|---|---|
| 4-1-1915 | 4-8-1968 |

தெய்வந் தொழாஅள்
கொழுநன் தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை




Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran

# இப்பொழுது! யுகோபாங்க் உங்கள் டிபாஸிட்டுகளை கிட்டத்தட்ட **மும்மடங்கு** ஆக்குகின்றது




## நீங்கள் யுகோபாங்க் டிபாஸிட் ஸர்டிபிகேட் திட்டத்தில் பணம் போட்டு வைத்தால்!

இத்திட்டப்படி ரூ. 5000 டிபாஸிட் செய்கிறீர்கள் என்றால், அத்தொகை சரியாக 15 ஆண்டுகளில் கிட்டத்தட்ட மூன்று மடங்கான ரூ. 15,000 ஆகப் பெருகிவிடுகிறது. நீங்கள் முதலில் போட்ட பணத்திற்கு இது எவ்வளவு கணிசமான தொகை! இத்திட்டம், குறைந்த தொகை ரூ 100 லிருந்து தொடங்கி அதற்கு மேல் எவ்வளவு தொகை வேண்டுமானாலும் போகலாம்.

தாங்களே தங்களுக்கு உதவ
மக்களுக்கு லாபகரமாக உதவுகிறது




# யுனைடெட் கமர்ஷியல் பாங்க்

UCOC.20 TAM

REGISTERED No. M. 4392

Registered as a Newspaper in Sri Lanka இலங்கையில் விலை 50 சதம் (தபால் செலவு தனி)